REGISTERED No. M. 1500.

# நவசக்தி

NAVASAKTI

(தமிழ் வாரப் பதிப்பு)

வெள்ளிக்கிழமை தோறும் வெளிவருவது.

“வீடு பெறநில்” “மாற்றானுக் கிடங்கொடேல்” “ஏற்பதிகழ்ச்சி”

சிலம்பு 2. துந்துபிஸு புரட்டாசிமீ கசுவ (29—9—22) பரல் 47.



## “ஸ்ட்ரெயிட்ஸ் டைம்ஸி”ன் கூற்று

‘ஸ்ட்ரெயிட்ஸ் டைம்ஸ்’ என்ற சிங்கப்பூரில் வெளியாகும் ஓர் ஆங்கிலோ இந்தியப் பத்திரிகை “இந்தியாவைப்பற்றிய உண்மைகள்” என்ற மகுடமிட்டு 6-6-1922-ல் பின்வருமாறு ஒரு தலையங்கம் எழுதியிருக்கிறது:-

“ஸர் மைக்கல் பிரான்சிஸ் ஓட்வியர் ஐ. சி. எஸ், கே. சி. எஸ். ஐ தமது வாழ்நாள் முழுவதையும் இந்தியாவிலேயே கழித்து அரசாங்க ஊழியரில் சிறந்தவருள் ஒருவர் என்ற பெயரும் ஏற்றுக்கொண்டார். ‘ராயல் கலோனியல் இன்ஸ்டிடியூட்’ என்ற சங்கத்தின் பத்திரிகையில் இங்கிலாந்துக்கும் இந்தியாவுக்கும் இருக்கவேண்டிய சம்பந்தத்தைப்பற்றி ஓர் அரிய வியாசம் எழுதியுள்ளார். இத்தகைய வியாசத்தை நாம் இதுகாறும் பார்த்ததில்லை. “இந்தியாவும் குடியேற்றநாட்டுச் சுதந்திரமும்” என்பது அவ்வியாசத்திற்குத் தலைப் பெயர். ஸ்ரீமான் மாண்டேகு இந்தியாவில் அநுசரிக்கப்பட வேண்டிய எந்தக் கொள்கைக்குக் காரணராயிருந்தாரோ அந்தக் கொள்கையைப்பற்றி அவ்வியாசத்தில் ஆராய்ச்சி செய்யப்பட்டிருக்கிறது. “ஏகாதிபத்தியச் சூட்பட்டு பிரிட்டிஷ் இந்தியாவில் படிப்படியாகப் பொறுப்பாட்சி வழங்குவதற்காக, இந்திய ஆட்சி முறையின் எல்லாப் பாகங்களிலும் இந்தியர்களை அதிகமாகச் சேர்த்துக்கொள்வதென்றும் ஸ்தல சுய ஆட்சி ஸ்தாபனங்களை விருத்தி செய்வதென்றும்” 1919-ம் வருஷத்து இந்திய அரசாங்கச் சீர்திருத்தச் சட்டத்தில் பார்லிமெண்டின் நோக்கம் குறிக்கப்பட்டிருக்கிறது. ஸர் மைக்கல் ஓட்வியர் கூறுகிற வண்ணம் இந்த நோக்கம் மிகவும் நல்லதுதான். ஆனால் இந்த நோக்கத்தைப் பூர்த்தி செய்ய வேண்டுமென்று கூறுகிறவர்கள் — முக்கியமாக காந்தி போன்ற பொறுமையற்ற சீர்திருத்தக்காரர்கள்—குடியேற்ற நாட்டுச் சுதந்திரம் என்றால் என்னவென்பதை அறியாதவர்களாயிருக்கிறார்கள். விரோத பாவங்கொண்டுள்ள இரண்டு மதஸ்தர்கள் இருப்பதனால் என்ன தீங்குகள் சம்பவிக்கும் என்பதற்கு ஐர்லாந்து ஒருசிறந்த உதாரணமாயிருக்கிறது. சுய ஆட்சியைப் பெற்றுள்ள குடியேற்ற நாடுகள் மேனாட்டு நாகரிகத்தைப் பின் பற்றியவைகளாகவே இருக்கின்றன. இந்தியாவிலோ இருபத்தைந்து விதமான முக்கிய பாஷைகளும் நூற்றுக் கணக்கான சில்லறை மொழிகளும் பேசப்படுகின்றன. சுய ஆட்சி அல்லது ஜனநாயக ஆட்சி என்பதை குறிக்கும் சொற்கள் மேற்கூறப்பட்ட எந்தப்பாஷையிலும் இல்லை. இதனால் சுய ஆட்சி அல்லது ஜனநாயக ஆட்சி என்பதற்கு இந்திய ஜனங்கள் புறம்பானவர்கள் என்பது தெற்றெனப் புலப்படுகிறது.

ஐர்லாந்தில், இரண்டு மதங்கள்—அல்லது ஒரு மதத்தின் இரண்டு கிளைகள்—இருப்பது பெரிய தடையாயிருக்கிறது. இந்தியாவிலோ ஹிந்துக்கள், முகம்மதியர்கள், சீக்கியர்கள் என்று மூன்று பெரிய மதஸ்தர்கள் இருக்கிறார்கள். இவர்களுக்குள் இன்னும் அநேக பிரிவுகள் இருக்கின்றன. இது தவிர, ஜாதிப் பிரிவினைகள் இருக்கின்றன. தீண்டப்படாதவர்கள் என்று சொல்லப்பட்ட சுமார் ஐந்து கோடி ஜனங்கள் இந்தியாவில் இருக்கிறார்கள் என்பதை இந்தியக் கிளர்ச்சிக்காரருக்கு அநுதாபமாயுள்ள எத்தனை ஐரோப்பியர் அறிவர்? எல்லாரும் சமமானவர் என்ற தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டுள்ள ஜனநாயக ஆட்சிக்குத் தீண்டாமையை அநுசரிக்கும் இந்தியா தகுதியுடையதா? மத சம்பந்தமான பொறுமை எங்கேனும் இருக்கிறதா? ஸர் மைக்கல் சமீபத்தில் நடைபெற்ற சில சம்பவங்களை எடுத்துக்காட்டுகிறார். 1917-ம் வருஷம் செப்டம்பர் மாதம் பீஹாரில் அநேக முகம்மதியர்கள் ஹிந்துக்களால் கொலை செய்யப்பட்டார்கள்; பல நூறு பேர் கொள்ளையடிக்கப்பட்டார்கள். பிரிட்டிஷ் துருப்புகளைக்கொண்டே—இந்தியத் துருப்புகளை நம்ப முடியவில்லை—அமைதியுண்டாக்க வேண்டியதாயிற்று. இதே மாதிரியே 1919-ம் வருஷத்திலும் ஐக்கிய மாகாணத்தில் ஹிந்துக்கள், முகம்மதியர்களை நெருப்பில்போட்டுப் பொசுக்கி விட்டார்கள். 1921-ம் வருஷம் பிப்ரவரி மாதம் சீக்கியருக்குள்ளேயே இரண்டு கட்சிதோன்றி அதன் பயனாக 130 பேர் கொலை செய்யப்பட்டனர். மாப்பிள்ளைமார் குழப்பத்தில் ஹிந்துக்களிடத்தில் முகம்மதியர்கள் பலவிதமான அநாகரிகச் செயல்களைச் செய்தார்கள்; பல ஹிந்துக்களை முகம்மதிய மதத்தில் பலவந்தமாகச் சேர்த்தார்கள். இந்தச் சம்பவத்தைப் பற்றி “சண்டை செய்வதுதான் தங்கள் மதம் என்று எண்ணி மாப்பிள்ளைமார் சண்டையிடுகின்றனர்” என்று காந்தி வியாக்கியானம் எழுதினார். முகம்மதியர், ஹிந்துக்கள், சீக்கியர்கள் ஆகிய இவர்களுடைய மதங்களைப்பற்றி நாம் ஒன்றும் கூறவில்லை. போகாராவில் சிவப்புச் சேனையார் செய்த அநாகரிகச் செயல்களைக்கொண்டு கிறிஸ்துவ மதத்தை ஆராய்தல் எங்ஙனம் பொருந்தாதோ அங்ஙனமே இந்தச் சம்பவங்களைக் கொண்டு மேற்கூறப்பட்ட மதங்களின் தன்மையை ஆராயக்கூடாது. இந்த மதங்களினாலேயே இந்தக்கொடுமைகள் நிகழ்கின்றன என்றும் சொல்லக்கூடாது. இவைகளை நாம் அங்கீகரிக்கிறோம். ஆனால் இந்த மதத்தைக் அநுசரிக்கிறவர்கள் எத்தகைய நாகரிகத்தைப் பின்பற்றி நடக்கிறார்கள் என்பதையே இராஜ தந்திரிகள் கவனிக்கவேண்டும்.

கல்வியிலாவது இந்தியா முன்னேற்றமடைந்திருக்கிறதா என்பதைக் கவனிப்போம். நூற்றுக்கு ஆறுபேரே தங்கள் கையெழுத்தைப் போடத் தெரிந்தவர்களாயிருக்கிறார்கள். இந்தியச் சட்டசபைக்குப் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்க ஜனத் தொகையில் 265 பேரில் ஒருவருக்கே ஓட் உரிமையிருக்கிறது. இங்ஙனம் ஓட் உரிமை பெற்றவரில் ஐவரில் ஒருவரே தங்கள் ஓட் உரிமையை உபயோகப்படுத்தினார். மாகாணச் சட்டசபைகளுக்குப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும் உரிமையை ஜனங்களில் 45 பேருக்கு ஒருவரே பெற்றிருக்கிறார். இங்ஙனம் உரிமை பெற்ற நால்வரில் ஒருவரே அவ்வுரிமையை உபயோகித்திருக்கின்றார். இவைகள் உண்மையான விஷயங்களேயன்றி கட்டுக் கதைகளல்ல. இந்தியர்களிடத்திலே ஜாதி ஒற்றுமை இல்லை; மத ஒற்றுமை இல்லை; பொதுப்பாஷை இல்லை; பொதுநல எண்ணம் இல்லை. இவர்களைத் தங்களுக்குள்ளேயே ஆண்டுகொள்ளும்படி விட்டுவிட்டால், இவர்கள் தங்களுக்குள்ளேயே பெருஞ் சத்துருக்களாகி விடுகிறார்கள். எந்த வகுப்பாரோடும் சேர்ந்து கொள்ளாமல் நியாயம் வழங்குவதிலேயே கண்ணுயிருக்கும் கடு நிலைமையுள்ள ஓர் ஆட்சி இருப்பதினாலேயே இப்பொழுது இந்தியாவில் சமாதானம் பரவியிருக்கிறது. சுய ஆட்சி என்றால் தற்காப்பு என்பது உடனே வேண்டியிருக்கிறது. இந்தியாவுக்கு வடபுறத்தில் மலைகளில் வசிக்கும் கொடூர ஜாதியார் எப்பொழுது கொள்ளையடிக்கலாம் என்று காத்துக்கொண்டிருக்கின்றனர். பிரிட்டிஷ் ஆட்சியில் கூட எல்லைப்புற விஷயம் எப்பொழுதும் ஒரு கவலையாகவே இருக்கிறது. சீர்திருத்தம் வேண்டுமென்று கூறுவோர் இவ்விஷயத்தைப் பற்றிக் கவனிப்பதேயில்லை. இந்தியாவை ஆட்சி செய்வதில் நாம் திருப்தி அடையலாம், ஆனால் பிறர் அதை ஆண்டுகொண்டிருக்க, நாம் போலீஸ்காரர் போல் அதைப் பாதுகாத்துக்கொண்டிருக்க முடியாது. இந்தியாவுக்குச் சுய ஆட்சி கொடுப்பதா அல்லது இப்பொழுது கொடுத்திருக்கும் சீர்திருத்தத்தை வாபீஸ் வாங்கி விடுவதா என்பதை நிர்ணயிக்கப் பத்து வருஷ காலம் செல்லவேண்டுமென்று 1919-ம் வருஷத்துச் சீர்திருத்தச் சட்டத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. 1919-ம் வருஷத்துச் சீர்திருத்தச் சட்டம் அமுலுக்கு வந்த பத்து மாதங்களுக்குள்ளேயே, இந்தியச் சட்டசபையிலுள்ள இந்தியக் கிளர்ச்சிக்காரர்கள் குருட்டுத்தனமாக இன்னொரு படி முன்னேற வேண்டுமென்று கூக்குரலிட்டார்கள். வேகமாக முன்னேற்றமடைவதனால் எந்த விதமான தீமைகள் உண்டாகுமென்பதற்கு பிலிப்பைன் தீவுகளே ஒரு சிறந்த இலக்கியமாக இருக்கிறது. மேனாட்டு நிருவாகிகளின் கீழ்ப் பிலிப்பைன் தீவு படிப்படியாக முன்னேறிக்கொண்டு வந்தது. ஆனால் பிரசிடெண்ட் வில்சன் பொறுமையிழந்து, ஆட்சி நிருவாகமனைத்தையும் பிலிப்பைனர்களுடைய வசத்திலேயே ஒப்புவித்து விட்டனர். இதனால் ஆட்சியின் போக்கு சீர்கெட்டுப்போய் விட்டது. கொடிய பழக்கங்கள் பல மலிந்துவிட்டன. அரசாங்கத்தைப் பழைய நிலைமைக்குக் கொண்டுவர வேண்டுமானால் மேனாட்டுச் செல்வாக்கை அங்கு நிலை பெறுத்தவேண்டும். “நாம் (இங்கிலீஷ்காரர்) சுய ஆட்சிபெற எத்தனை நூற்றாண்டுகள் சச்சரவிட்டோம் என்பதை மறந்துவிடுகிறோம்” என்று பிலிப்பைன் தீவின் கவர்னர் கூறியிருப்பதை ஸர் மைக்கல் ஓட்வியர் எடுத்துக்காட்டியிருக்கிறார். இந்திய அரசியல் கிளர்ச்சிக்காரர்களிடத்தில் அநுதாபங்கொள்ளும் பிரிட்டிஷ் தாராளக்கட்சியார் இந்த உண்மையை மறந்துவிடுகிறார்கள். இந்தியாவின் உண்மை நிலையை இந்தத் தாராளக்கட்சியார் அறிவதில்லை. அங்ஙனமே அறிந்தவர்களுடைய யோசனையையும் அங்கீகரிப்பதில்லை. இந்தியக் குடிமக்களிடத்தில் அநுதாபம்காட்ட வேண்டுமென்ற எண்ணத்தினால், அவர்களை (இந்தியர்களை) இரத்தக் குழப்பத்திற்குள்ளாக்கி விடுவார்கள் போலும். இதை—இந்தியாவைப் பாதுகாக்க வேண்டும் என்று நமக்கு வீழ்ந்திருக்கும் பொறுப்பினின்றும் நாம் நீங்கிக்கொள்வோமானால் என்ன உண்டாகுமென்பதை—தாராளக் கட்சியைச்சேர்ந்த ஜான்மர்லி நன்குக எடுத்துக் காட்டியிருக்கிறார்.”

## நமது பதில்

இந்தக் கட்டுரையை வரைந்த அறிஞருக்கு முதலில் எமது வணக்கத்தைச் செலுத்திவிட்டு பிறகு இவ்வியாசத்தில் காணப்படும் சில ‘உண்மை’களை எடுத்துக் காட்ட விரும்புகிறோம். மேற் கூறப்பட்ட வியாசம் ஸர் மைக்கல் ஓட்வியரின் கட்டுரையை ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்டிருக்கிறது. ஓட்வியரைப் பற்றி நாம் இங்கு அதிகமாகக் கூறப்போவதில்லை. ஆனால் அவர் ஓர் ஐரிஷ்காரர் என்பதைத் தெரிவிக்க விரும்புகிறோம், ஐர்லாந்தின் சுதந்திரத்திற்காக உயிரை விட்ட கிரிப்பித்ஸும், காலின்ஸும் போர் செய்துகொண்டிருக்கும் டிவலேராவும் தற்கால ஐரிஷ் அரசாங்கத்தை நடத்திக் கொண்டிருக்கும் ஸ்ரீமான் காஸ்க்ரேவும், இங்கிலாந்தின் செல்வாக்கு உலகமெங்கும் பரவுதற்குத் தமது நாட்டிலே பிறந்த ஒருவர் முனைந்து நிற்கிறார் என்பதைக் குறித்துச் சந்தோஷப்பட்டார்கள்; சந்தோஷப்படுவார்கள் என்று நம்புகிறோம். இந்தியாவின் தீமைகளைப் பற்றி எடுத்துரைப்பதிலேயே கண்ணுங் கருத்துமாயிருக்கும் ஓட்வியர் இந்தியாவின் சரித்திரத்தையும் உலக சரித்திரத்தையும் படிப்பதில் தம் கவனத்தைச் செலுத்துவாரானால் இம்மையிலும் மறுமையிலும் நல்ல புகழ் பெறுவார்.

ஐர்லாந்தில் இரண்டு மதஸ்தர்கள் இருப்பதனால் அதிக சச்சரவுகள் நேரிடுகின்றன என்பதை ‘இந்தியாவைப் பற்றிய உண்மைகள்’ என்ற வியாசத்தை எழுதினவர் எடுத்துக் காட்டுகிறார். இரண்டு மதஸ்தர்கள் இருக்கும் ஐர்லாந்திலேயே இவ்வளவு சச்சரவானால் பல்வேறு மதங்களைக் கொண்ட இந்தியா சுய ஆட்சி பெற்றுவிட்டதானால் என்ன தீமைகள் உண்டாகும் என்று கேளாமற் கேட்கிறார். அங்ஙனமானால் இதுகாலை சுய ஆட்சி பெற்றுள்ள நாடுகள் யாவும் ஒரு மதத்தினரையே கொண்டிருக்கின்றனவா? உலகத்திற்கே சுய ஆட்சித் திட்டத்தைக் கற்பிக்கும் இங்கிலாந்தில் ஒரு மதத்தினரே இருக்கின்றனரா? மற்று ஐர்லாந்தில் ஒரே மதத்தைச் சேர்ந்த பிராடஸ்டண்டுகளுக்கும் கத்தோலிக்கர்களுக்கும் அந்நிய ஆட்சியின் கீழேயே சச்சரவு ஏற்பட்டன என்பது இக் கட்டுரைக்காரருக்குத் தெரியாது போலும். ஒரு மதஸ்தரையே குடிகளாகக் கொண்ட நாடுகளே சுயராஜ்யம் பெற உரியன என்ற தத்துவத்தை நாம் ஏற்படுத்தி விட்டால் உலகத்திலுள்ள எந்தத் தேசமும் சுய ஆட்சி பெற முடியாது.

சுய ஆட்சி என்ற பொருளைக் குறிக்கும் மொழிகள் இந்தியாவிலுள்ள எந்தப் பாஷையிலும் இல்லையென்பது இரண்டாவது தடை. இந்தியாவில் வழங்கும் எத்தனை மொழிகளை இந்தக் கட்டுரைக்காரர் அறிந்து கொண்டிருக்கிறாரோ தெரியவில்லை. 1919-ம் வருஷத்துச் சீர்திருத்தச் சட்டம் அமுலுக்கு வந்த போழ்து சக்ரவர்த்திப் பெருமான் வெளியிட்ட சாஸனத்தில் “ஸ்வராஜ்யம்” என்ற மொழி உபயோகிக்கப்பட்டிருக்கிறது. இந்த வடமொழியோ இதை ஆங்கில மொழி [illegible] ஓட்வியர் அறியமாட்டாரென்றே கருதுகிறோம். “நல்லாண்மை என்பது ஒருவற்குத் தான் பிறந்த இல்லாண்மை ஆக்கிக்கொளல்” என்னுந் திருவாக்கு யாருடையது? சுய ஆட்சி அல்லது ஜனநாயக ஆட்சியைக் குறிக்கும் மொழியே இந்தியபாஷைகளில் இல்லாததினால் ஜனநாயக ஆட்சியையே இந்தியர்கள் அறியமாட்டார்கள் என்று மற்றொரு தடை கூறப்படுகிறது. குடியாட்சி கோனாட்சி குடிக்கோனாட்சி என்னுஞ் சொல்லாட்சி எம்மொழியினது என்று ஓட்வியரைக் கேட்கிறோம். ஜன விருப்பத்தைத் தழுவிய ஆட்சி இந்தியாவில் பண்டைக் காலத்தில் நடைபெற்றதைப்போல் உலகத்தில் வேறெந்தப்பாகத்திலும் நடைபெறவில்லை என்பதற்கு எவ்வளவோ ஆதாரங்கள் இருக்கின்றன. அவைகளை எடுத்துக்காட்ட இங்கு இடமில்லை. ஈண்டு ஒரு கேள்வி கேட்க விரும்புகிறோம். ஜனநாயக ஆட்சி என்று அடிக்கடி பறையடிக்கும் இங்கிலாந்தினர், இந்த ஜனநாயக ஆட்சியின் தத்துவத்தை எப்பொழுது கற்றுக்கொண்டனர்? யாரிடத்தில் கற்றுக்கொண்டனர்? ஒருவரிடத்திலும் கற்றுக்கொள்ளவில்லையானால் இயற்கையாகவே இவர்களுக்கு இந்த உணர்ச்சி வந்துவிட்டதா? முதலாவது சார்லஸ் அரசன் காலத்தில் இங்கிலாந்தில் எந்த விதமான தத்துவம் குடிகொண்டிருந்தது? அரசனுக்காகக் குடிகள் படைக்கப்பட்டார்கள் என்று சார்லஸ் அரசன் எண்ணியிருந்ததைப்போல் இந்தியாவில் எந்த அரசனாவது எண்ணியதுண்டா? எந்த மன்னரேனும் சார்லஸைப்போல் நடந்து கொண்டதுண்டா?

ஐந்து கோடி ஜனங்களைத் தீண்டாதவர்களென்று ஒதுக்கித்தள்ளிவிட்டு சுய ஆட்சி பெறுதல் எங்ஙனம் முடியும் என்பது ஒரு கேள்வி. சுயராஜ்யம் வேண்டுமென்று கூறும் எவனும் தீண்டாமை ஒழிய வேண்டுமென்றே விரும்புகிறான். ஹிந்து மதத்திற்கும் இந்திய தேசத்திற்கும் தீண்டாமை என்பது ஒரு பெருங் களங்கமாய் நிற்கிறது என்பதை நாம் அங்கீகரித்துக் கொள்கிறோம். ஆனால் அந்த ஒரு காரணத்திற்காகவே இந்தியா சுய ஆட்சி பெறத் தகுதியுடையதன்று என்று கூறுவது பொருந்தாது. சுயராஜ்யம் வந்தால் தீண்டாமை என்பது விரைவில் விலகும் என்பது நமது அபிப்பிராயம். இந்தியாவில் தீண்டப்படாதவருக்கும் ஜாதி ஹிந்துக்களுக்கும் இடையே தீண்டாமை இருப்பது உண்மையே. ஆயினும் இருபிரிவாருக்கும் எவ்விதத்திலும் [illegible] பாவம் குறைந்ததாகத் தெரியவில்லை. இருபிரிவாரும் [illegible] நின்று மண்டை உடைத்துக்கொண்டதாகத் தெரியவில்லை. ஜாதி ஹிந்துக்களே,

தீண்டப் படாதவரைக் கொடுமையாக நடத்துகிறார்கள் என்று சில ஐரோப்பியர் கூறுகிறார். அமெரிக்கர்கள் நீக்ரோவர்களை நடத்துவதைவிடக் கேவலமாக இந்தியாவில் தீண்டப்படாதவர் ஜாதி ஹிந்துக்களால் நடத்தப்படுகின்றனரா? அமெரிக்கர்கள் சுயராஜ்ஜியம் பெற்று விடவில்லையா? தீண்டாமை ஒழியவேண்டியதுதான். ஆனால் அதற்காகச் சுயராஜ்ஜியத்தை மறுப்பது கூடாதென்றே நாம் கூறுகிறோம்.

எல்லாரையும் சமமாக எண்ணுதல் என்ற தத்துவமே ஜனநாயக ஆட்சிக்கு அடிப்படையாயிருப்பது என மேற்படி வியாசத்தில் காணப்பட்டிருக்கிறது. இந்தத் தத்துவத்தைப் போற்றாதாரில்லை. ஆனால் இங்கிலீஷ் காரருடைய ஆட்சி இத்தத்துவத்தை அடிப்படையாகக்கொண்டு நடைபெறுகிறதா என்பதே கேள்வி. கென்யாவிலும் பிஜியிலும் மற்றக் குடியேற்ற நாடுகளிலும் இந்தியர்கள் ஐரோப்பியர்களுக்குச் சமானமானவர்களாகக் கருதப்படுகிறார்களா? இந்தியாவிலேயே இந்த வேற்றுமை காண்பிக்கப்படவில்லையா? எல்லா இனத்தவரும், எல்லாச் சாதியாரும், எல்லா நிறத்தவரும் சமமாகக் கருதப்பட வேண்டுமென்றும் கூறும் ஆங்கிலேயர், கறுப்பு நிறத்தவர்களை மாத்திரம் வேறு விதமாக நடத்துவானேன்? அப்படியிருந்தும் இவர்கள் சுயராஜ்ஜியம் பெற்றிருக்கவில்லையா?

சென்ற இரண்டு மூன்று வருஷங்களாக இந்தியாவில் நடைபெற்ற ஹிந்து-முஸ்லீம் குழப்பங்களை வருணித்து, பிரிட்டிஷார் ஒரு விநாடி இல்லாவிட்டால் ஹிந்துக்களும் முஸ்லீம்களும், சீக்கியர்களும் ஒருவருக்கொருவர் தொண்டையைப் பிடித்துக் கொள்வார்களென்று மேற்படி கட்டுரைக்காரர் கூறுகிறார். ஒரே மதத்தினரைக் கொண்ட நாட்டில் அமைதி நிலவுமென்பதும் பல மதத்தினரைக் கொண்ட நாட்டில் குழப்பமே நிரம்பியிருக்குமென்பதும் இவர் அபிப்பிராயமெனத் தெரிகிறது. இந்த அபிப்பிராயத்தை இவர் இந்தியா விஷயத்தில் மாத்திரம் கொண்டுள்ளது வியப்பாயிருக்கிறது. கிறிஸ்தவ மதத்தைத் தழுவும் ஆங்கிலேயரும் ஜர்மானியரும் ஏன் போரிட்டுக்கொண்டனர்? ஒரே மதத்தினராயிருந்தும் சண்டை போட்டுக்கொண்டதனால் இவர் சுயராஜ்ஜியம் பெறுதற்கு அருகரல்லரா? ஜாதி வித்தியாசங்களும் மத பேதங்களும் இந்தியாவில் மாத்திரம் தான் இருக்கின்றனவா? உலகத்தின் வேறு எப்பாகத்திலும் இல்லையா? இல்லையானால் ஸ்ரீமான் மாண்டேகுவும் லார்ட் ரேடிங்கும் யூதஜாதியைச் சேர்ந்தவர் என்று சிலர் கூறவில்லையா? இதனால் இங்கிலாந்திலும் ஜாதிவேற்றுமை இருக்கிறதென்பது நன்கு புலனாகிறது. இதற்காக இங்கிலாந்து சுயராஜ்ஜியத்திற்குத் தகுதியுடையதில்லை என்று கூறில்வேதா? இங்கிலாந்தில் இப்பொழுதுள்ளபடி ஜனநாயக ஆட்சி ஏற்பட்டதற்கு முன்னிருந்த ஜாதித் துவேஷங்களும் மதப்பிளவுகளும் கட்சி வேற்றுமைகளும் இப்பொழுது இருக்கின்றன என்று எந்த ஐரோப்பியச் சரித்திரக்காரனேனும் கூறத்துணிவானா? இதனால்சுயராஜ்ஜியம் வந்தால் இந்தத் தீங்குகள் ஒழிந்துவிடும் என்பது நன்கு புலனாகவில்லையா?

இந்தியாவிலே எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் நூற்றுக்கு ஆறு பேரே இருக்கின்றனரென்றும் ஓட் உரிமையைப் பெற்றிருந்தும் அதனைச் செலுத்துவோர் சிலரே யென்றும் மேற்படிகட்டுரையில் கூறப்பட்டிருக்கின்றன. இந்தியாவில் எழுதப் படிக்கத் தெரிந்தவர் குறைவாயிருப்பதற்குக் காரணர் யாவர்? பிரிட்டிஷார் இந்தியாவில் ஆட்சி புரியத் தொடங்கி நூற்றைம்பது வருஷங்களாகியும் நூற்றுக்கு அறுவரே கல்வி கற்றவர் இருக்கின்றனரென்றால் அக்குறைவு யாரைச் சேர்ந்தது? பிரிட்டிஷார் வராமலிருந்ததற்கு முன்னர் இந்தியா அறியாமைப் பிண்டமாக இருந்ததென்று எந்த மூடனும் கூறமாட்டான். மற்றும் கல்வி கற்றவர் என்பதற்கு ஆங்கிலேயர் கொண்டுள்ள பொருளுக்கும் இந்தியர்கொண்டுள்ளபொருளுக்கும்வேற்றுமையுண்டு. ஒருவன்உலக விஷயங்களிலும் சாஸ்திர அறிவிலும் பெரும் புலவனாக இருக்கலாம். ஆனால் அவனுக்குத் தன் கையெழுத்தைப் போடக்கத் தெரியாதிருக்கலாம். இதனால் அவனைக் கல்வியறிவு அற்றவன் என்று கூறில்வேதா? இத்தகையரையே இந்தியா பெரும்பாலோராகக் கொண்டிருக்கிறது என்பதை இந்திய விரோதிகள் உணரவேண்டும். இந்தியாவில் ஓட்டுரிமையைச் செலுத்துவோரின் எண்ணிக்கை குறைவு என்று சொல்லப்படுகிறது. ஆனால் இங்கிலாந்தில் எத்தனை பேர் ஓட் உரிமையைச் செலுத்துகின்றனர்? 1920-ம் வருஷம் டிசம்பர் மாதம் நடைபெற்ற தேர்தலில் நூற்றுக்கு ஐம்பதுக்குக் குறைவானவரே ஓட் கொடுத்திருக்கின்றனர் என்று தேசியப் பத்திரிகைகள் கூற, எல்லாத் தேசங்களிலும் இதைவிடக் குறைவான பேரே ஓட் கொடுத்தனர் என்று விளம்பர சபை அதிகாரிகள் முழக்கம் செய்தார்கள். இதனால் மேற்படி தேசங்கள் சுயராஜ்ஜியம் பெறுவது கூடாது என்று ஸர் மைக்கல் ஓட்வியர் கூறத் துணிவரா? நாகரிகமும் ஜனநாயகமும் தாண்டவமாடும் இங்கிலாந்தின் காமன்ஸ் சபையில் அங்கத்தினராயமரும் ஜனப் பிரதிநிதிகளில் எத்தனை பேர் தங்கள் பொறுப்பை உணர்ந்து காமன்ஸ் சபைக் கூட்டங்களுக்குச் செல்கின்றனர்? சுமார் அறுநூறு பேரை அங்கத்தினராகக் கொண்ட காமன்ஸ் சபையின் சாதாரண கூட்டங்களில் எத்தனை பேர் பிரசன்னமா யிருக்கின்றனர்? சாதாரண காலங்களில் அறுபது பேரே பிரசன்னமா யிருப்பரென்பதும் முக்கியமான காலங்களில் நூறு அல்லது நூற்றிருபது பேருக்கு மேல் பிரசன்னமா யிருக்கமாட்டாரென்பதும் எவருக்கும் தெரியும். இதனால் இங்கிலாந்து ஜனநாயக ஆட்சிக்கு உரியதன்று எனத் தள்ளிவிடலாமா?

தற்காத்துக்கொள்ளச் சக்திபெறாத இந்தியா சுயஆட்சிக்குரியதன்று என்ற ஆக்ஷேபம் கூறப்படுகிறது. நூற்றைம்பது வருஷங்களுக்கு முன்னர் வரை, அயல் நாட்டாருக்குப் போர்கொடுத்து தன் மதத்தையும், கலைகளையும், ஞானத்தையும் காப்பாற்றிக்கொண்டு வந்த இந்தியா இப்பொழுது தற்காத்துக்கொள்ளச் சக்தியற்றதாயிருக்கிறது! ஆண்வேடம் பூண்டு, கோத்தளத்தின் மீதேறி, ஒரு கை வாளேந்தி தன்னை எதிர்த்து வந்த மோகலாய சேனையை நீறுபடுத்திய சாந்த் பீபியையும், ராணாபிரதாப சிங்கையும், சிவாஜியையும் இன்னும் கோடிக்கணக்கான வீரர்களையும் பெற்ற இந்தியா இப்பொழுது தற்காத்துக் கொள்ள வலிமையற்றிருக்கிறது! ஆமுகாடு முற்றுகையிலும் பிளாசியுத்தத்திலும் உயிரையும் பொருட்படுத்தாமல் கிளைவுக்கு உதவி செய்த இந்தியர் இப்பொழுது தற்காத்துக் கொள்ள முடியாதவராயிருக்கின்றனர்! இந்தியா, தற்காத்துக்கொள்ள சக்தியற்றிருக்கிறதென்றால் அது யாருடைய குற்றம்? அந்நிய ஆட்சியின் கீழ் ஒரு தேசம் தற்காத்துக்கொள்ளும் சக்தியைப் பெறுமா அல்லது சுய ஆட்சியின் கீழ் அச்சக்தியைப் பெறுமா என்பதை "ஸ்ட்ரெயிட்ஸ் டைம்ஸ்" தலையெழுத்துக்காரர் கவனித்தல் வேண்டும். பிரிட்டனை உரோமர்கள் ஆண்டபோது பிரித்தானியர்கள் தற்காத்துக்கொள்ளும் சக்தியைப் பெற்றிருந்தார்களா? ஐரோப்பிய யுத்தத்தில் ஜர்மானியர் முதலில் பின்னிடைவதற்குக் காரணராயிருந்தவர் யார்? இந்தியரே. ஆனால் இங்கு ஓர் ஆக்ஷேபம் கூறலாம். ஐரோப்பியருடைய நிருவாகத்திலிருப்பதனாலேயே இந்தியத் துருப்புகள் திறமையுடையனவா யிருக்கின்றன என்று சிலர் கூறக்கூடும். இந்தியர்கள் சேனாநாயகத்துவத்தை வகிக்கப் போதிய ஆற்றல் பெற்றிருக்கவில்லையா? சுதேச சமஸ்தானங்களிலுள்ள சேனாதிபதிகள் இந்தியர்களல்லவா? அங்ஙனமிருக்க, ஐரோப்பியருடைய பொறுப்பின்றேல் இந்தியருடைய திறமை குன்றிப் போகும் என்ற வாதம் கீழ் வீழ்ந்துவிடும்.

பிலிப்பைன் தீவு ஓர் உதாரணமாகக் கொண்டு வரப்படுகிறது. பிலிப்பைன் தீவு அமெரிக்கருடைய ஆதிக்கத்திற்கு வருவதற்கு முன்னர் பாழ்வனமாக இல்லை. அப்பொழுதும் ஆட்சியென்றும் குடிகள் என்றும் இருந்தார்கள். மேனாட்டாருடைய அதிகாரச் செல்வாக்குக் குறைந்ததும் அங்கு அநியாயங்கள் தழைக்கத் தொடங்கிவிட்டன என்று கூறுவது உண்மைக்கு மாறான கூற்றாகும். பிலிப்பைன் தீவினர்கள், சுதந்திரத்தைப் பெறும் பொருட்டு ஒத்துழையாமையை அநுசரிக்கப் போவதாக முன்னர் அறிவித்தனர் என்பது நேயர்களுக்குத் தெரியும். இதனின்றும் அவர்களுடைய சுதந்தர ஆவல் நன்கு விளங்கும். மேனாட்டு நாகரிக ஆட்சிமுறை தங்களுக்குச் சாதகமாயிருந்தால் அவர்கள் ஒரு காலும் ஒத்துழையாமையைக் கைக்கொள்ள முயல மாட்டார்கள். இதனை அனைவரும் கவனிக்கவேண்டும்.

முடிவாக ஒன்று கூறவிரும்புகிறோம். எந்தெந்தப் பகைவர் எந்தெந்த விதமாகக்கூறிய போதிலும், இந்தியா சுயராஜ்ஜியம் பெறத் தீர்மானித்துவிட்டது. எந்த மயக்க மொழிகளும், எந்தத் தருக்கவாதங்களும், இந்தியாவை, அதன் ஒத்துழையா மார்க்கத்தினின்று திருப்பா. இதை ஸர்மைக்கல் ஓட்வியர் நன்குணர்தல் வேண்டும். அவருடைய ஆட்சி முறையிலும் அவருடைய உரைகளிலும் இந்தியாவுக்கு அதிக அநுபவம் உண்டு.

## ஆப்கானியர்கள் சுதந்திரக் கொண்டாட்டம்

### அமீரின் உபந்யாசம்

கல்கத்தா அமிர்தபசார்பத்திரிகைக்குக் காபூல் நிருபர் எழுவதில் காணப்படும் முக்கிய விஷயங்களின் சாரம் வருமாறு:—

பழைய அமீர் கொலை செய்யப்பட்டுத் தற்கால அமீராய் இருந்து வரும் அமீர் காஜி அமானுல்லாகான் பட்டத்திற்கு வந்ததும் ஆப்கானிஸ்தானத்திற்கு உள்நாட்டு விஷயங்களிலும் வெளி நாட்டு விஷயங்களிலும் பூர்ண சுதந்தரம் கொடுக்கப்பட்டுவிட வேண்டுமென்று இந்தியஇராஜப்பிரதிநிதிக்கு எழுதிக் கேட்க, அன்னார் அதைப் பற்றிச் செவ்வையாய்ப் பதிலெழுதாமல் ஒருவிதமாய்ப் பதில் எழுதி அனுப்பி விட்டார். பின்னர் ஆப்கானியர்களுக்கும் இந்திய அரசாங்கத்தாருக்கும் யுத்தம் நடைபெற்றது. முதலில் ஆப்கானியர்கள் யுத்தத்தில் வெற்றியடைந்தார்கள். பின்னர் தோற்றுப் போய் விடவே, பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் அமீர் ராஜி செய்து கொண்டு சுதந்தரம் பெற்ற நாட்டினரைப் போல் ஆய் விட்டார்கள். ருஷியா, இங்கிலாந்து, பிரான்சு, ஜெர்மனி, துருக்கி, இத்தாலி, சைனா, பாரசீகம் ஆகிய இராஜ்யங்களுக்குத் தன் பிரதிநிதிகளை அனுப்பவும் அங்கிருந்து பிரதிநிதிகளைத் தன் நாட்டில் வைத்துக் கொண்டிருக்கவும் இதுகால ஆப்கானிஸ்தானம் உரிமை பெற்றிருக்கிறது. ஆப்கானியர்கள் தாங்கள் சுதந்தரம் பெற்ற தினத்தை வருடா வருடம் சிறப்பாகக் கொண்டாடுவது வழக்கம். அதைப் போல் இவ்வருடத்திலும் அத்தினத்தைச் சிறப்பாகவே கொண்டாடினார்கள். அது கால ஆப்கன் அமீர் தம் பிரஜைகளுக்குச் செய்த உபந்யாசத்தின் சாரம் வருமாறு:—

நான் இத்தேசத்திய இராஜ்ய பாரத்தை ஏற்றுக்கொண்ட நாளிலிருந்து அநேக துறைகளில் நம் தேசம் விருத்தியடைந்திருக்கிறதென்பதை நீங்கள் அறிவீர்கள். சட்ட பரிபாலனம், கல்வி, நியாய ஸ்தலங்கள், இராணுவம், வருமானம் ஆகிய எல்லாத் துறைகளிலும் நம் தேசம் முன்னையவிட இப்போது விருத்தியேயடைந்திருக்கிறது. நான் சக்கரவர்த்தியாய் இருந்த போதிலும் உங்களுடைய வேலைக்காரனேயாவேன். நான் உங்களுடைய நன்மைகளைக் கருதியே காரியங்களைச் செய்து வருகிறேன். பண்டைக் காலத்தில் பணக்காரர்களும் வியாபாரிகளும் ஏழைகளுக்குச் சொல்லொணா இடுக்கண்களை இழைத்து வந்தார்கள். இப்பொழுதோ வெனில் எல்லாரும் சட்டத்தின் முன்னிலையில் சரி சமானமாகவே நடத்தப்பட்டு வருகிறார்கள். உங்களை நியாயமின்றி அநியாயமாய்க் கஷ்டத்திற்கு உள்ளாக்க என்னாலும் பிறராலும் இயலாது. நம் தேசத்திலிருக்கப்பட்ட அனைவரும் சுதந்தரம் பெற்றவர்களாய்ப் போய் விட்டார்கள். முன்னர் அதிகாரிகள் லஞ்சம் முதலானவை வாங்கி வந்ததனால் ஏழைகள் அதிக கஷ்டத்திற்கு உள்ளாக வேண்டியதாயிற்று. இப்பொழுதோவெனில் லஞ்சம் முதலானவைகளைப் பெறும் உத்தியோகஸ்தர்கள் எத்தகைச் சிறப்பு வாய்ந்தவர்களா யிருந்தாலும் சட்டப்படி தண்டனைக்கு உள்ளாக வேண்டியவர்களே. இவைதான் உங்களுக்குக் கிடைத்திருக்கும் பெருத்த சாஸனமாகும். பலவந்தப் படுத்தி நீங்கள் மேற்கூறிய உரிமைகளைப் பெறவில்லை. நானாகவே அவைகளை உங்களுக்கு மனப்பூர்த்தியாய் அளித்திருக்கிறேன். நானாவட்டத்தில் நிர்வாகச் செலவு அதிகரித்தும் பொக்கிஷத்தில் பணம் அதிகமாகிக் கொண்டே வருகிறது. பலவகைத் தொழில்களைக் கற்று அதில் தேர்ச்சி அடைந்து வருவதற்காக நம் தேசத்து மாணவர்களில் நூறு பேரை அரசாங்கச் செலவில் இந்தியா, ஜெர்மனி பிரான்சு முதலிய நாடுகளுக்கு அனுப்பியுள்ளோம். கல்வி இலவசமாகக் கற்றுக் கொடுக்கப்படுவதுடன் அநேக ஏழை மாணவர்களுக்குப் புத்தகங்களும் சாப்பாடும் ஆடைகளும் இனமாகக் கொடுக்கப்படுகின்றன. நமது தேசத்தில் உண்டாக்கப்படும் பொருள்கள் இதர நாட்டுப் பொருள்களை விடத் தாழ்வாய் இருந்தாலும் அவைகளையே நீங்கள் உபயோகிக்க வேண்டும். நீங்கள் அந்நிய நாட்டுச் சாமான்களை உபயோகிப்பீர்களானால் உங்களுடைய பொருள் பகைவர்களிடம் சென்று வெடிக் குண்டுகளாகமாறி உங்கள் தலைமீதுவந்து விழும் என்பதை நீங்கள் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். நம் தேசத்தில் இருக்கப்பட்ட அனைவரும் கதரை உடுத்திக் கொள்ள வேண்டும். நீங்கள் கதரை உடுத்திக் கொள்ள வேண்டுமென்று நான் அடிக்கடி சொல்லி வருவதைக் கேட்டுப் பலர் என்னைப் பைத்தியக்காரனென்றும் கூறுகிறார்கள். அவர்கள் அம்மாதிரி கூறுவதை நான் கவனிக்க மாட்டேன். நம் தேசத்திலேயே நேர்த்தியானதும் மிருதுவானதுமான கதர் செய்யப்படுகிறது. நான் அணிந்திருக்கும் ஆடைகள் இத்தேசத்திலேயே செய்யப்பட்டனவாகும். சேனாதிபதியும் நம் நாட்டிலேயே உண்டான ஆடைகளை உடுத்திக் கொண்டிருக்கிறார். இந்த உடையை நான் உடுத்திக் கொண்டிருப்பதனால் எந்த வழியிலும் மற்றவர்களுக்குக் கீழானவனாக மாட்டேன். இந்த உடையை அணிந்து கொண்டிருப்பதனால் என் மதிப்பும் போய் விடவில்லை. கதரை உடுத்திக் கொள்வதனால் உங்களுடைய செலவு குறைவதல்லாமல் பலருக்கு வேலை தேடிக் கொடுக்கிறபெரும்புண்ணியத்தையும் நீங்கள்செய்தவர்களாவீர்கள். இம்மாதிரி செய்வதனால் சன்னத்தனத்திலும்பிற தீய செயல்களிலும் அவர்களுடைய புத்தி போகாமல் இருக்க நீங்கள் காரியங்களைச் செய்தவர்களாகிறீர்கள். ஆடைகளுக்காக வருட வாரியில் நான் பன்னிரண்டாயிரம் ரூபா செலவழித்திருக்கிறேன். இப்போது வருஷம் ஒன்றுக்கு அறுநூறு ரூபாயே செலவாகின்றது. நீங்கள் அனைவரும் உண்மையானவர்களாகவும் உங்கள் கடமைகளைச் சரிவர செய்பவர்களாகவும் மதப்பற்றுள்ளவர்களாகவும் இருந்து வர வேண்டும். மதப்பற்று ஒவ்வொருவருக்கும் இன்றியமையாததாகும். மதப்பற்றில்லாவிட்டால்பயனில்லை. நான்மரணத்திற்குப் பயப்படவே இல்லை. இப்போதும் இறக்கச் சித்தமாகவே இருக்கிறேன். ஆப்கானிஸ்தானத்திற்குச் செய்ய உத்தேசித்திருக்கும் காரியங்களில் நூறில் ஒரு பங்கு கூட இதுவரையும் செய்யாமல் இருக்கிறேன். இஸ்லாமுக்காகவும் ஆப்கானிஸ்தானத்திற்காகவும் உயிர்க்க வேண்டுமென்பது என் பிரதமகோரிக்கை. உங்களுடையவேலைக்காரனாதலால் எனக்கு அவகாசமேயில்லை. தேசத்தின் நிலையை விருத்தியாக்கச் சதா உழைத்து வருகிறேன். நான் இங்கிலாந்திற்கும் ஆப்கானிஸ்தானத்திற்கும் உழைக்கக் கடவுள் எனக்கு சக்தி அளிப்பாராக.

## செய்தித் திரட்டு

அக்டோபர் 2-ந் தேதியைக் காந்தியின் பிறந்த தினமாகக் கொண்டாட வேண்டுமென்றும், அவருக்கு நீண்ட ஆயுளையும் திட சரீரத்தையும் கொடுக்கக் கடவுளுக்குப் பிரார்த்தனை செலுத்த வேண்டுமென்றும், தேசியக் கொள்கைகள் நிறைவேறுதற்குப் பிரார்த்தனைகள் செய்ய வேண்டுமென்றும் கதரைப் பரப்புவதற்குமுயற்சி செய்ய வேண்டுமென்றும் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் காரியக் கமிட்டியார் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியுள்ளார்.

* * *

இம்மாதம் 22-ந் தேதியில் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் காரியக் கமிட்டியார் மூல்தானில் கூடிக் கீழ்வரும் இரண்டு தீர்மானங்களை நிறைவேற்றியிருக்கின்றனர்.

இந் நெருக்கடியான நிலையில் தேசசேவையிலும் முதிர்ந்த அநுபவத்திலும் சிறந்தவரான 'அமிர்தபசார்' பத்திரிகையின் ஆசிரியரான ஸ்ரீமான் பாபு மோதிலால் கோஷ் இவ்வுலகை நீத்து விட்டதற்காக இக்கமிட்டியார் தங்கள் அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கின்றனர்.

துருக்கியர்கள் அடைந்த வெற்றிகளுக்காக இக்காரியக் கமிட்டியார் இந்தியமக்களின்சார்பாகத்தங்கள் சந்தோஷத்தைக் காஜி முஸ்தபா கெமால் பாட்சாவுக்கும் துருக்கி தேசத்தாருக்கும் தெரிவிப்பதல்லாமல், இந்தியா அவர்களுக்கு உதவி செய்து கொண்டிருக்கு மென்றும் தெரிவித்துக் கொள்கின்றனர்.

* * *

வங்காள நிர்வாக சபை அங்கத்தினரான சர் ஜான்கெர் ஆசாம் கவர்னராய் நியமிக்கப்பட்டுள்ளார்.

* * *

அலிகார் முஸ்லிம் சர்வ கலாசாலைக்கு பம்பாய்க் கவர்னர் ஆயிரம் ரூபா நன்கொடை யளித்துள்ளார், இதுவல்லாமல் போபாலைச் சேர்ந்த நவாப் மேஜர் ஒபிதுல்லாகான் என்பார் லட்சமும் நவாப் நஸ்மில்லுல்லாகான் ஒரு லட்சமும் நன்கொடையாக அளித்துள்ளார்கள்.

* * *

தில்லியில், நியாதர்மால் ராங்கிலால் என்னும் மோட்டார் கம்பெனி வைக்கப்பட்டிருக்கும் கட்டடம் மழை காரணமாகவும் சிர்குலைந்த நிலை காரணமாகவும் சென்ற 22-ந் தேதியில் இடிந்து வீழ்ந்து விட்டது. அதனால் பொருட் சேதம் அதிகமானதல்லாமல் நான்கு பேர் இறந்துபோய் விட்டார்களென்றும் தெரிகிறது. இக்கட்டடம் தில்லியிலுள்ள மிகப் பழமையான கட்டடமாம்.

* * *

அமெரிக்க ஐக்கிய மாகாணத்தைச்சேர்ந்த பியோரியா எனுமிடத்தைச் சேர்ந்த இரும்புத்தொழிற்சாலையைச் சேர்ந்த ஒரு தொழிலாளி இரும்பு முதலான உலோக வகைகள் ஒரு சிறிதுமில்லாமல் மரத்தைக் கொண்டு கடியாரம் ஒன்றைச் செய்துள்ளார். இக்கடியாரத்தைச் செய்ய மூன்று வருட காலம் பிடித்தது. இக்கடியாரம் மணி ஒன்றை மாத்திரம் காட்டுவதல்லாமல் நாட்கணக்குகளையும் மாதக் கணக்குகளையும் கால நிலையையும் இதர விஷயங்களையும் காட்டக்கூடியதா யிருக்கிறது.

* * *

ஸ்ரீமான் ஒ. ஜி. ஹார்டிலி என்ற ஐரோப்பியர் சென்னையிலுள்ள மான்ஸ்பீல்ட் கம்பெனிக்குச் சென்று அங்கிருந்த குதிரையொன்றை விலை முதலியவை தீர்த்துக் கொள்ளாமல் அழைத்துச் சென்று குறிப்பிட்ட தவணையின்படி வராமற்போகவே கம்பெனியார் இதைப்பற்றிப்போலீசாருக்கு அறிவிக்க அன்னார் மேற்கூறிய ஐரோப்பியரைப் பூவிருந்த வல்லியிலுள்ள காடொன்றில் கண்டு பிடித்துச்சென்னை பிரதம மாஜிஸ்ட்ரேட்முன்னிலையில் நிறுத்தினார்கள். அந்த ஐரோப்பியர் தாம் செய்த குற்றத்தை ஒப்புக் கொள்ளவே மாஜிஸ்ட்ரேட் அவர் மீது திருட்டுக் குற்றஞ் சாட்டி ஆறு வாரக் கடுங்காவல் தண்டனை விதித்தார்.



ஆஸ்திரேலியாவின் ஜனத் தொகை 5,510,229 ஆகும்.

* * *

சென்ற18-ந்தேதியில்ஸ்ரீநிரிபேந்திரசந்திரபானர்ஜி என்பவரால் சித்தாங்கில் கதர் சந்தையொன்று திறக்கப்பட்டது.

* * *

அமெரிக்காவில் சிகாகோ பட்டணத்தில் ரேடியோ மூலமாய்ப் பேசும் படங்கள் காண்பிக்கப்பட்டு வருகின்றன.

* * *

ஸ்ரீ சாடிலெகாயின்டி என்ற ஆகாய விமானி மணி ஒன்றுக்கு 213 மைல் வீதம் பறந்திருக்கிறார். இதுவரை இம்மாதிரி யாருஞ் செய்ததில்லை.

* * *

கி. பி. கோ 99-வது பிரிவுபடி பஞ்சாப் அரசாங்கத்தார் குஸ்நாசிப் ஹிந்துஸ்தான் என்ற தேசிய உருது நாடகத்தைப் பறிமுதல் செய்துவிட்டார்கள்.

* * *

இவ்வருடத்தில் வெளி நாடுகளிலிருந்து இந்தியா 1042 மோட்டார் வண்டிகளை இறக்குமதி செய்திருக்கிறது. இவைகளின் விலை 40 லட்சமாகும்.

* * *

மலையாளக் குழப்பத்தில் சம்பந்தப்பட்ட ஸ்ரீமான் பி. நாராயண மேனன் என்ற ஹிந்து வக்கீல் தீவாந்திர சிட்சை விதிக்கப்பட்டார்.

* * *

கர்நாடக காங்கிரஸ் கமிட்டி உதவித் தலைவருக்கு கி. பு. கோ 108-வது பிரிவுபடி ஒரு வருடக்கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது.

* * *

ஸ்மர்னாவில் பெருந் தீவிபத்து ஏற்பட்டு ஸ்மர்னா நகரம் நாசமாக்கப்பட்டதற்குக் காரணம் ஆர்மீனியர்கள் தான் என்று பிரபல பிரெஞ்சுபிரமாணங்களால் தெரிய வருகிறது.

* * *

அம்மாபட்டி ஸ்ரீமான் வேங்கடராமய்யர், ஸ்ரீமான் சக்கிரவர்த்தி அய்யங்கார் ஸ்ரீமான் பவானிசிங் ஆகிய இவர்கள் இம்மாதம் 25-ந் தேதியில் கடலூர் சிறையினின்று விடுதலை செய்யப்பட்டார்கள்.

* * *

நாசிக் ஜில்லாவிலுள்ள திரும்பக நகரபரிபாலன சபையாருக்குத் தாங்களாகவே தலைவரைத் தெரிந்தெடுக்கும் உரிமை இருந்துவந்ததைப் பம்பாய் அரசாங்கத்தார் எடுத்துவிட்டனர்.

* * *

ஸ்ரீமான் ராய் என்பவரால் எழுதப்பட்டிருக்கும் "மாறுதல் நிலையில் இருக்கும் இந்தியா" என்ற நூல் கடல் சுங்கச் சட்டத்தின்படி இந்தியாவுக்கு வரக்கூடாதென்று தடுக்கப்பட்டிருக்கிறது.

* * *

ருஷ்யக் கோயிலைச்சேர்ந்த 143 பாதிரிமார்களில் அறுபது பாதிரிமார்கள் தங்கள் உரிமைகளை இழந்து விட்டார்கள். புதிய போல்ஷ்விக் கோயில் ஏற்பாடுகளில் 37 பாதிரிகள் சேர்ந்து கொண்டார்கள்.

* * *

மாஜி கெய்சர் தம்முடைய சரித்திரக் குறிப்புகளைப் பற்றி எழுதும் புத்தகத்திற்கு பதிலளிக்கு முகத்தான் ஸ்ரீமான் அஸ்குவித் ஒரு புத்தகம் எழுதத் தீர்மானித்துள்ளார்.

* * *

திருத்தப்பட்ட நகல் விதிகளைப்பற்றிக் கவனிப்பதற்காக இம்மாதம் 30-ந் தேதியில் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் விசேஷக் கூட்டமொன்று திருச்சியில் நடைபெறும்.

* * *

டாக்காவைச் சேர்ந்த மூன்று தேசியத் தொண்டர்கள் அந்நிய நாட்டுக் கடைகளுக்கருகில் மறியல் வேலை செய்தமைக்காகக் கைதி செய்யப்பட்டு விசாரணைக்கு அனுப்பப்பட் டுள்ளார்கள்.

* * *

ஒத்துழையா இயக்கம் சம்பந்தமாக மியின்சிங் எனுமிடத்தில் தண்டிக்கப்பட்ட பதின்மூன்று தொண்டர்கள் டாக்கா சிறையினின்று விடுதலை செய்யப்பட்டார்கள்.

* * *

பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளில் இருக்கும் இந்தியர்களுக்குச் சமஉரிமைகள் வாங்கிக் கொடுக்கச் சென்றிருக்கும் ஸ்ரீமான் ஸ்ரீநிவாச சாஸ்திரியார் டிசம்பர் 1-ந் தேதியில் கொழும்பு வந்து சேர்வர் என்று தெரிகிறது.

* * *

அங்கப்ப நாய்க்கன் தெருவில் சென்னை வில்சன் அண்டு கம்பெனிக்குச் சொந்தமான கிடங்கொன்றில் 26-ந் தேதி இரவு தீவிபத்து உண்டாயிற்றென்றும் முப்பதாயிரம் ரூபா பெறுமான சாமான்கள் நாசமாக்கப்பட்டன என்றும் தெரிகிறது.

* * *

சென்ற ஆகஸ்ட் மாதத்தில் பிரிட்டிஷ் இந்தியாவுக்கு வெளி நாடுகளிலிருந்து 2120 லட்சம் ரூபா பெறுமான சாமான்கள் இறக்குமதி யாகியிருக்கின்றன. வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்ட பொருள்களின் தொகை 2521 லட்சம் ரூபா ஆகும்.

* * *

சென்ற 21-ந் தேதி மாலையில் சுவாமி விசாரானந்த் மான்ஜி என்பார் அனுப்சாயர் எனுமிடத்தில் கைதியாக்கப்பட்டு புலாந்ஷையர் எனுமிடத்திற்குப் போலீஸ் பாதுகாப்பில் அனுப்பப்பட்டுள்ளார். சுவாமியார் 124 ஏ பிரிவுபடி கைதியாக்கப்பட்டுள்ளார் என்று தெரிகிறது.

* * *

ஐக்கிய மாகாணத்திலுள்ள பாரபங்கி ஜில்லாவைச் சேர்ந்த திகாரியா ஜில்லா வாசிகளின் நடத்தை முறையானதாய் இல்லாமல் இருக்கிறதென்று கருதி அதிகாரிகள் அவ்விடத்திய போலீஸ் படையை ஒரு வருட காலத்திற்கு அதிகப்படுத்தியுள்ளார்.

* * *

இந்தியா மந்திரி சபையின் அங்கத்தினர்களில் ஒருவராய் இருக்கும் சர் தாதாபாய் தலால் இம்மாதம் 22-ந் தேதியில் லண்டனைவிட்டு இந்தியாவுக்குப் புறப்பட்டு விட்டார். அவர் தில்லியில் நவம்பர் 10-ந் தேதியில் இன்ச்கேப் கமிட்டியுடன் சேர்ந்துகொள்வர்.

* * *

நிலத்தில் ஓடும் துவிச்சக்கர வண்டியைப் போல் கடலிலும் தமாஷாய்ச் செல்வதற்குரிய ஒருவகைத் துவிச்சக்கர வண்டி கண்டு பிடிக்கப்பட் டிருக்கிறது. மடித்து விட்டால் சிறிய பையைப் போல் ஆகிவிடக் கூடிய இவ்வியந்திரத்தின் நிறை 20 பவுனாகும்.

* * *

பிரான்ஸிலுள்ள டிஜ்ஜான் பட்டணத்திற்கு அருகிலுள்ள அப்ரிக் எனும் மலையின்மேல் மாலுமிகளுக்கு வழி காட்டியாய் இருக்கும் தீபஸ்தம்பம் ஒன்று அமைக்கப்பட்டிருக்கிறது. இம்மலையின் மீதிருந்து வீசும் ஒளி 200 மைல் தூரம் வரையும் பரவுகிறதாம்.

* * *

கடலூர் நியாயஸ்தலத்தில் இருக்கும் புத்தகாலயத்தில் உள்ள ஒரு பியூன் காந்தி குல்லாய் அணிந்து கொண்டிருந்தாராம். இதை ஜில்லா நீதிபதியான ஸ்ரீமான் ஸ்டோடார்ட் கண்டு அந்தப் பியூனுக்கு எச்சரிக்கை செய்ததல்லாமல் குல்லாயைக் கழற்றி விடும்படியாகவும் கட்டளையிட்டாராம்.

* * *

டாக்கா தேசியக் கல்லூரியின் பௌதிக சாஸ்திர இலாகாவிற்கு டாக்டர் பி. ச. ரே ஆயிரம் ரூபா நன்கொடையாக அளித்துள்ளார். டாக்டர் ரே மியின்சிங், நெட்ரோகானா ஆகிய இவ்விடங்களுக்குச் சென்று அந்நிய நாட்டுத் துணிகளைப் பகிஷ்கரிக்க வேண்டியதன் அவசியத்தை ஜனங்களுக்கு எடுத்துரைத்தார்.

* * *

காசிபூரைச் சேர்ந்த பண்டித இராமசந்திர சர்மா என்பார் இம்மாதம் 20-ந் தேதியில் திரும்பவும் கைதியாக்கப்பட்டு 108-வது பிரிவுபடி விசாரிக்கப்பட்டு வருகிறார். இவர் மீது வழக்கு நடைபெறுவதற்குக் காரணம் இவர் அகாலியர்களின் தீரச் செயல்களை மெச்சி உபந்யாசஞ் செய்ததேயாகுமென்று தெரிகிறது.

* * *

சிகோசிலோவாகியன் உலகச் சுற்றுப் பிரயாணியான ஸ்ரீமான் போல், ஏ. கிராவ்ஜ்பர் என்பார் சென்ற திங்கட்கிழமையில் சென்னை கெயிடி தியேட்டருக்கருகில் சென்று கொண்டிருக்கையில் இரண்டு சார்ஜண்டுகள் இவரை வழிமறித்து எந்த ஊர் எதற்காகச் சுற்றுப் பிரயாணம் செய்கிறீர் என்ற விஷயங்களைப்பற்றி விசாரணை செய்து பின்னர் அனுப்பிவிட்டார்கள்.

* * *

சசிபூஷன் ஹாஸ்ரா என்பார் தாம் மகாத்மாவின் சீடரென்று பொய் வேடம் பூண்டு ஜனங்களை ஏமாற்றிப் பணம் பிடுங்கிக் கொண்டு வந்தார். இவர் திஜ்பூர் காங்கிரஸ் கமிட்டியின் காரியதரிசியின் வேண்டுகோளுக்கிணங்கக் கைதி செய்யப்பட்டு திஜ்பூர் டிபுடி மாஜிஸ்ட்ரேட்டால் பதினெட்டு மாதக் கடுங்காவல் தண்டனைக்கு உட்படுத்தப்பட்டார். பின்னர் கல்கத்தா ஹைகோர்ட்டிற்கு மனு செய்து கொள்ள ஹைகோர்ட்டார் தண்டனையைக் குறைத்து ஒன்பது மாதக் கடுங்காவல் தண்டனை ஆக்கி விட்டார்கள்.

* * *

சமீபத்தில் கடலூர் சிறையினின்று விடுதலையடைந்த கம்பலிடம் குமார ராஜா வேங்கடகிரிக்குச் சென்றிருந்த காலையில் ரெயில்வே ஸ்டேஷனில் உபசாரப் பத்திரம் ஒன்று வாசித்துக் கொடுக்கப்பட்டது. அப்பத்திரத்திற்குப் பதிலளிக்கு முகத்தான் ஒன்றிரண்டு வார்த்தைகள் சொல்லிக் கொண்டிருக்கையில், 144-வது பிரிவுபடி பிறப்பிக்கப்பட்ட உத்தரவுபடி பேச வொட்டாது தடுக்கப்பட்டார்.

* * *

எவரெவர்களுக்கு ஆயுதங்கள் கொடுக்கப்படலாம் என்பதைப்பற்றி விசாரணை செய்ய சென்ற ஜூலை மாதத்தில் சர் வில்லியம் வின்சென்டின் தலைமையில் கூடிய கமிட்டியார் தங்கள் முடிபுகள் யாவை என்பதைப்பற்றி முடிவு செய்துள்ளார்கள். முக்கிய விஷயங்கள் சம்பந்தமாக எல்லா அங்கத்தினர்களின் கருத்தும் ஒரே விதமாய் இருக்கின்றதென்றும் ஆனால் சில அங்கத்தினர்கள் மாத்திரம் ஆயுதம் வைத்திருக்க லைசன்ஸ் கேட்பவர்களின் அரசியல் கொள்கைகளைப் பாராட்டாமல் பொதுவாய்க் காரியங்களைச் செய்ய வேண்டுமென்று தனியாக ஓர் அறிக்கையை வெளியிட்டிருக்கின்றனரென்றும் தெரிகிறது.

* * *

லைசன்ஸ்பெருமல் கைத்துப்பாக்கி ஒன்றை வைத்திருந்தாரென்றும், தம்மைப்பிடிக்கவந்த தலைமைகான்ஸ்டேபிளைக் கொல்ல முயற்சித்தாரென்றும், இராஜ நிந்தனையான உபந்யாசங்கள் செய்தாரென்றும், முதலாளிகளுக்கு விரோதமாகத் தொழிலாளிகளைத் தூண்டி விட்டாரென்றும் குற்றஞ் சாட்டப்பட்டுக் கைதியாக்கப்பட்ட ஸ்ரீமான் நீலகண்ட பிரம்மச்சாரியின் வழக்கு இம்மாதம் 25-ந் தேதியில் சென்னை பிரதம மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் மறுபடியும் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுச் சாட்சிகள் விசாரணை செய்யப்பட்டார்கள். பின்னர் மாஜிஸ்ட்ரேட் வழக்கை அக்டோபர் இரண்டாந் தேதிக்குத் தள்ளிப்போட்டுவிட்டு விட்டார்.

* * *

மாளய அமாவாசையையும் சூரிய கிரகணத்தையும் முன்னிட்டுச் செல்லும் பெரும்பாலோரான பிரயாணிகளை ஏற்றிச் சென்ற இராமேஸ்வரம் எக்ஸ்பிரஸ் சென்ற 17-ந் தேதி இரவு 9-10-மணிக்குத் திருச்சிக்கு அருகிலுள்ளபொற்கோட்டையில் தண்டவாளத்தை விட்டு தாண்டி விட்டதென்றும் இரண்டல்லது மூன்று வண்டிகள் கவிழ்த்து விட்டன என்றும் ஒரு பிராமணரும் ஒரு பிராமணரல்லாதாரும் இறந்து விட்டார்களென்றும் சென்ற வாரத்தில் குறிப்பிடப்பட்டிருந்தது. பின்னர் கிடைத்த செய்திகளின்படி வண்டிகள் கவிழ்ந்து விடவில்லையென்றும் வண்டிகள் தண்ட வாளத்தை விட்டு தாண்டியது உண்மையென்றும், ஒரு பிராமணர் மாத்திரம் இறந்தது உண்மையென்றும் காணக்கிடக்கிறது.

* * *

குருக்ஷேத்திரத்திலுள்ள குளத்தில் கிரகணத்தின்போது ஸ்நானம் செய்வதற்காகச் சென்ற ஜனத்திரளில் சுமார் 60 பேர் ஒருவர் மேல் ஒருவர் விழுந்ததன் காரணமாய்ச் சேதப்பட்டார்களாம்.

கல்கத்தாவிலும் சூரிய கிரகணத்தின் போது புது மனிதர்கள் வழி முதலானவை தெரியாமல் கஷ்டத்திற்கு ஆளாக வேண்டியவர்களானார்கள். ஆற்றில் இரண்டு பேருடைய பிணங்கள் காணப்பட்டன. சுமார் ஆறு பேருக்கு மூச்சுத் திணறிப் போய் விட்டது. இவர்களுக்கு வைத்தியத்தில் தேர்ச்சி பெற்றுள்ள தொண்டர்கள் வேண்டிவ செய்தார்கள்.

### திரு மாணிக்கவாசக சுவாமிகள் சபை

சிவபுரம் (வாலாஜபாத்)

இச்சபையின் ஏழாம் ஆண்டு விழா துந்துபிஞு புரட்டாசிமீ 14, 16உ (30-9-22) (2-10-22) சனி, திங்களில் நடைபெறும். இடையிலுள்ள 15உ (1-10-22) ஞாயிறுக்கிழமை இத்தமத பாடசாலையின் ஆறாம் ஆண்டு விழா கொண்டாடப்படும். சபை விழாவிற்குத் திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் மடாலயத்துத் தவத்திரு அடிகளார்: ஸ்ரீமத் - சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் அவர்களும் பாடசாலையதற்கு மறைமாண்பினர்: இராவ்பகதூர், செ. இராமாநுசாசாரியார், பி. ஏ., (அரசாங்க கல்வி, சிறுவ இலாகா துணைக்காரியதரிசியார்) அவர்களும் தலைமை வீற்றிருக்கத் திருவுள மிசைந்திருக்கின்றனர்.



## மூல்தான் குழப்பங்கள்

### பண்டித மாளவ்யா உபந்யாசம்

#### ஒற்றுமையே பிரதானம்

இம்மாதம் 25-ந் தேதியில் அமிர்தசரிஸுள்ள ஜலியன்வாலா பாக்கில் இந்து முஸ்லிம் ஒற்றுமை என்னும் விஷயத்தைக் குறித்துப் பண்டித மதன்மோகன் மாளவ்யா ஓர் உபந்யாசம் செய்தார். அப்போது அன்னார் பேசியதன் சாரம் வருமாறு:—

மூல்தானில் நடைபெற்ற வருந்தத்தக்க சம்பவங்களை முன்னிட்டு இக்கட்டம் மகா முக்கியமானது. ஆகவே நாம் பதறுமல் சாவதானமாய்க் காரியங்களைச் செய்ய வேண்டும். நம்முடைய பேச்சுகளிலும் காரியங்களிலும் தேசத்திற்கு நன்மை இருக்கவேண்டும்.

மூல்தான் சம்பவத்தினால் நாம் நம் நிலைமையைத் தொலைவிட்டுக்கொள்ள வேண்டியதாயிருக்கிறது. நம்முடைய பகைவர்கள் மூல்தான் சம்பவத்தைக்கொண்டு தங்களுக்குத் தெரிந்ததையெல்லாம் கூறி விடுகின்றனர். சில முகம்மதியர்கள் கோவில்களை நாசப்படுத்தியதையும் பாதுகாப்பு அற்றவர்களைத் தாக்கியதையும் வெறுக்கிறேன். இப்படி முகம்மதியர், கலகக்கூட்டத்தார் செய்யும் சில முகம்மதிய கனவான்கள் தங்கள் ஹிந்து சகோதரர்கள் விஷயமாக வேண்டிய செய்து அவர்கள் கஷ்டத்தைத் தணித்தார்கள். ஒரு முகம்மதிய ஸ்திரீ குழப்பத்தின் போது ஏறக்குறைய நூற்றுக்குச் சற்று குறைந்த ஹிந்து ஸ்திரீகளைத் தம்வீட்டில் வைத்துக் காப்பாற்றினார். இம்மாதரிக்கு நானும் ஹக்கீம் அஜ்மல்கானும் எங்களுடைய நன்றியறிதலைச் செலுத்தினோம். இம்மாதிரி அநேக சம்பவங்கள் நடைபெற்றிருக்கின்றன. குழப்பம் கலவரங்களாலும் வாயாடிகளாலும் ஏற்பட்டதாகும். இந்துக்கள் தங்களுடைய கோவில்கள் அழிக்கப்பட்டதைக் கண்டும், ஸ்திரீகள் தாக்கப்பட்டதைக் கண்டும் பலாத்காரத் துறையில் இறங்கி மருந்தினை நாசமாக்காமல் விட்டுவிட்டது குறிப்பிடத் தக்கதாகும்.

இந்துக்களும் முகம்மதியர்களுமாகிய நாம் இருவரும் ஒரே ஒரு கடவுளையே வணங்குகிறோம். வணங்குவதில் வித்தியாசம் இருந்தாலும் நாம் அந்நியோந்ய பாவத்தினின்று பிரிந்து விடுதல் கூடாத காரியமாகும். நாம் அனைவரும் மனித வர்க்கத்தினருக்கு அன்னை அயல் வீட்டுக்காரர்களுமாவோம். ஆகவே நாம் அனைவரும் பகைமையில்லாமல் சந்தோஷமாய்க் காலங்கழிக்க வேண்டுவது இன்றியமையாததாகும். மூல்தானில் நடைபெற்ற துக்ககரமான சம்பவங்களை இந்துக்களும் முகம்மதியர்களும் மறந்துவிட்டு அந்நியோந்யமாய் நடந்துகொள்ள வேண்டியது இன்றியமையாததாகும்.

நாமே நம்மைத் துன்புறுத்திக்கொள்ள நாம் இடங்கொடுக்கலாகாது. நகரங்களில் கூடிய ஒரு படை ஏற்படவேண்டியது இன்றியமையாததாகும்.

தில்லி மாகாண கிலாபத் கமிட்டியின் மாஜி காரியதரிசியான மௌலானா அப்துல் அஜீஸ் அன்சாரி சிறையினின்று விடுதலை செய்யப்பட்டு விட்டார்.



நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலையில்லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்பமில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளாவாளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே.—(அப்பர்.)

சென்னை 1922ஸு செப்டம்பர்மீ 29உ

## அந்தண நிலையும் அரசியலும்

உலகத்தில் பிறந்த ஒவ்வோருயிரும் ஒருகாலத்தில் அந்தண நிலையடைதல் வேண்டும். அந்தண நிலையடையாது பேரின்ப நுகர்தல் அருமை. ஒவ்வொருவரும் அந்தண நிலையைக் குறிக்கொண்டே தம் வாழ்க்கைப் படிகளிலேற முயலல் வேண்டும். அந்தண நிலையில் வருவது இன்பம். ஏனைய நிலைகளில் துன்பம் விளையும்.

அந்தண நிலையாவது என்னை? "அந்தணர் என்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்குஞ் - செந்தண்மை பூண்டொழுகலான்" என்னுந் திருக்குறளில் போந்துள்ள உண்மை நிலை அந்தண நிலை எனப்படும். எல்லா உயிரையும் தன்னுயிர்போல் கருதி, எவ்வுயிர்க்கும் மறந்தும் கேடு சூழாது, தன்னலங் கருதாது கருணைமேலிட்டான் மற்றவர்க்குழைக்கும் நீர்மையுடையான் அந்தணன் எனப்படுவன். இத்தன்மை யுடையான் இந்நாட்டில் இச்சமயத்தில் இக்குலத்தில் பிறக்க வேண்டுமென்னும் நியதியில்லை. அவனுக்குநாட்டுவேற்றுமைசமயவேற்றுமை சாதி வேற்றுமை தோன்றா. இவ்வேற்றுமை தோன்றப்பெறுவோர் பொறுமைக்களஞ்சியமாயிருத்தல்வேண்டும். அன்னவர் செயலால் எப்பொழுதும் போர் விளைந்து கொண்டேயிருக்கும். பொறுமை யருட்பா உள்ளமுடைய உத்தமரே அந்தணரென்போர்.

அந்தண நிலையடைந்த பெரியோர் எல்லா நாடுகளிலுமிருந்தனர்; இருக்கின்றனர்; இருப்பர். புத்தர் கிறிஸ்து மகம்மது டால்ஸ்டாய் முதலியோர் அந்தண நிலை அடைந்தவரேயாவர். பாரத நாட்டு முனிவர், ஆசாரியர் முதலியோர் அந்தணராய் வாழ்ந்தவரே. திருவள்ளுவர் நமது தமிழ் நாட்டில் தோன்றிய சிறந்த அந்தணர் என்பதை அறியாதாரில்லை. இப்பொழுது அந்தண நிலை பெற்று நம்மிடை மகாத்மாகாந்தி வதிகிறார்.

அந்தண நிலையென்பதும் சந்நியாசமென்பதும் ஒன்றே. பண்டைக் காலத்து மன்னர்கள் செங்கோலோச்சி நாடு புரந்து, பின்னர் சந்நியாசம் பெற்றுவந்ததை நூல்கள் விரித்துக் கூறுகின்றன. மனித வாழ்வின் நோக்கம் அந்தண நிலையடைய வேண்டுமென்பது மனித வாழ்வை ஆராய்வோர்க்குப் புலனாகும். ஒவ்வொருவர் கல்வியும் தொழிலும் பிறவும் அந்தண நிலையைக் குறிக்கொண்டு நிற்றல் வேண்டும். நமது நாட்டுக் கல்வியும் தொழிலும் பிறவும் அந்தண நிலையைக் குறிக்கொண்டு நிற்பதை இந்நாட்டு ஆராய்ச்சியுடையார் உணரலாம்.

இவ்வந்தண நிலை கேடுறாது ஓங்கி நிலவ வேண்டுமென்றெண்ணி நம் முன்னோர்கள் அரசியலை ஏற்படுத்தினார்கள். அரசியலாவது அந்தண நிலையை வளர்க்கும் சிறந்த துறைகளுள் ஒன்று. நாட்டில் அந்தண நிலையைக் கெடுப்பன குழப்பம், குடி, திருடு முதலியன. இவைகளை ஒழித்து அந்தண நிலையை ஓம்புவது அரசியல் துறை. பண்டை அரசியலில் அந்தண நிலை அடையும் கல்வி போதிக்கப்பட்டு வந்தது. அந்தண நிலைக்கென ஏற்பட்ட நமது நாட்டு அறநூல்கள்-அன்பு நூல்கள்-அறிவு நூல்கள் - அந்தோ! எங்குக் கிடக்கின்றனவோ? ஆ! நமது நாடு எந்நிலைக்கு வந்துவிட்டது! கடவுள் சோதனையோ? பாரத நாடே - - - - -

அந்தண நிலைக்கென ஏற்பட்ட அரசியல் இது காலை அழிந்துவிட்டது. பொருளாசையால் பொறாமையைக் கிளப்பிப்போரை மூட்டும் பாழான அரசியல் உலகத்தில் தோன்றியிருக்கிறது. அவ்வரசியலால் அந்தண நிலை அருகி வருகிறது. உலகத்தில் அழுக்காறும் அவாவும் மிகக் கோரமாக நடம் புரிகின்றன. அறத்துறைகளெல்லாம்மறைகின்றன. மறத்துறைகளெல்லாம் மலர்கின்றன. அறத்தைக் கெடுத்து மறத்தை வளர்க்கும் ஓர் அரசியல் வழியில் நடந்தால் என்ன விளையும்?

இப்பொழுது அறத்துக்குரிய அரசியலைக் கொள்வதா மறத்துக்குரிய அரசியலைக் கொள்வதா என்பது ஆராயற்பாலது. அந்தண நிலை வேறு, அரசியல் வேறு என்று பிரிப்பது அறிவுடைமையா என்பதும் ஆராயற்பாலது. இவ்வாராய்ச்சியில் தலைப்பட்ட அறிஞர் பல திறக் கருத்துக்களை வெளியிடுகிறார். ஒரு சிலர் அந்தண நிலைக்குரிய அரசியலே சிறந்ததென்றும், அந்தண நிலைக்கு உடலாயுள்ள அரசியலை வேறு பிரித்தலாகா தென்றுஞ் சொல்கின்றனர். வேறு சிலர் அந்தண நிலை வேறு என்றும் அதனுடன் ஆசை பொறாமை முதலியவற்றை வளர்க்கும் அரசியலைச் சோணர்ந்து நுழைத்தல் கூடாதென்றுஞ் சொல்கின்றனர். முன்னது நமது நாட்டுப் பழைய அரசியல்; பின்னது மேல் நாட்டு அரசியல். மகாத்மா காந்தி பொறுமை அன்பு முதலியவற்றை வளர்க்கவல்ல முன்னைய அரசியலை வலியுறுத்துகிறார். சிலர் "அது சந்நியாசம், வேண்டாம்" என்கிறார்.

அந்தண நிலையை வளர்க்குமுஞான அரசியலையே நாமும் விரும்புகிறோம். அதனால் சகோதரத்வம் நிலைபெறும். மேல்நாட்டு ஊன அரசியலால் மனித வாழ்வின் நோக்கம் நிறை வேறாது; சகோதர தர்மத்துக்குக் கேடு விளைந்து கொண்டிருக்கும். இவ்வரசியலால் மனிதனிடத்தில் இயல்பாக உள்ள கடவுள் குணமும் ஒழிந்து, அவனிடத்தில் பைசாச மிருக மிலேச்சகுணங்கள் பதிகின்றன. மனிதனைப் பைசாசமாக்கும் மிருகமாக்கும் மிலேச்சனாக்கும் அரசியலால் பெறும் சுயராஜ்யம் எமக்கு வேண்டாம். அது சுயராஜ்யமுமாகாது.

ஒவ்வொரு மனிதனும் தன் அறியாமை உணர்ந்து தேகத்தைப் பொருளாகக் கருதாது, ஆன்ம வாழ்வில் அறிவைச் செலுத்தும் சுதந்திரமன்றோ சுயராஜ்யமென்பது? அமெரிக்காவிலுள்ள அனைவரும் இங்கிலாந்திலுள்ள அனைவரும் ஜப்பானிலுள்ள அனைவரும் இந்தச் சுயராஜ்யம் பெற்றிருக்கிறார்? ஞான சுயராஜ்யம் பெற்ற தேசத்துக்குப் போர்வீரர் வேண்டுவதில்லை; சேவகர்கள் வேண்டுவதில்லை; காப்பே வேண்டுவதில்லை. "வாயால் பேசலாம்; எழுத்தால்எழுதலாம். இது முடியுமா" என்று சிலகண் பார்கள்ளென்கைகயாடுகிறார்கள். ஆகா பத்திலிறந்தும் தண்ணீரில்மூழ்கியும் உயிர்களை வருத்தும் அறிவை நாம் கூறும் அரசியல் வழிச்செலுத்தினால் ஏன் முடியாது? மனங்கொண்டால் மனிதன் எல்லாஞ்செய்யலாம். ஞான சுயராஜ்யம் பெற்ற முனிவர் வழியில் தோன்றிய நம்மவரே ஞான அரசியலை வெறுக்கின்றாரெனில் ஏனையோர் வெறுப்பதைக் குறித்து நாமென்ன கூறவது? ஒரு கூட்டத்தார் காந்தியடிகள் அந்தண அரசியலைக் குறை கூறினும், ஏனையோர் காந்தியடிகள் உபதேச மொழிகளைச் சிந்தித்துச் சிந்தித்து உண்மை தெளிந்து உலகத்துக்கு உழைப்பாராக.

காந்தியடிகள் சத்தியாக்கிரகம் ஒடுங்காதென்பதை அகாலியர் செயலை எடுத்துக் காட்டாக உலகங்கொள்ளல் வேண்டும். அகாலியர் சீக்கியர். சீக்கியர் என்றால் சிங்கங்கள் என்பது பொருள். அன்னார் அடிபட்டும், உதைபட்டும், அறைபட்டும், மண்டைகளுடையப்பெற்றும், வேறுபல உறுப்புக்கள் சிதறப்பெற்றும் நிலை கலங்காது பொறுமையை நெகிழவிடாதிருப்பது சத்தியாக்கிரகத்தின் வெற்றியைப் புலப்படுத்த வில்லையா? இன்னும் மூர்க்கசக்தி கிளம்புகின்ற இடங்களிலெல்லாம் ஆன்ம சக்தி எழும்புமென்பதில் சந்தேகமில்லை. இவ்வாறு பல விடங்களில் ஆத்ம சக்தியின் உண்மை வெளி வருமானால் உலகம் அவ்வழி பற்றாதா? லாயிட் ஜார்ஜ் போன்றவர்கள் காந்தியடிகள் சீடராகமாட்டார்களா? உலகத்துக்கு நன்மை செய்யும் பழைய அந்தண அரசியலை வளர்க்க வந்த பெரியார் உபதேச வழி நிற்பதே நமது கடமை. அந்தண நிலையை வேறாகவும் அரசியலை வேறாகவும் நாம் கருதோம்.

பாரத புதல்வர்களே! நீங்கள் அந்தணர் முனிவர் அன்பர் பரம்பரையில் வந்தவர்கள். உங்கள் பரம்பரை கள்ளா கொடியர் பரம்பரையன்று. உங்கட்கு உரியது அந்தண நிலையே. அந்நிலையில் நிற்க முயலுங்கள். உங்களுக்குக் கடவுள் வேண்டுமா? பிசாசு வேண்டுமா? கடவுள் வேண்டுமானால் காந்தியைத் தேடுங்கள்; சாந்தி யடையுங்கள்.

## காலின்ஸும் கோகலேயும்

ஐரிஷ்காரரின் தலைவருள் ஒருவராய் விளங்கிய ஸ்ரீமான் மைகல் காலின்ஸ் என்பவர் இறந்து போன பிறகு அவரது தேகம் சவக்குழியில் சேர்க்கப்பட்ட காலத்து, தளபதி முல்காஹி என்ற ஐரிஷ் சேனாதிபதி கல்லும் கரைந்துருகும் வண்ணம் ஓர் உபந்நியாசம் செய்தார். அது வருமாறு:—

"ஓர் இளஞ்சிங்கத்தின் சவக்குழியின் முன்னர் இன்று நாம் வணங்கி நிற்கிறோம். மைகல் காலின்ஸின் சரித்திரம் பிற்காலத்தில் இதிகாசமாகக் கொண்டாடப்படும். அவருடைய வாழ்க்கை நமது தேச சரித்திரத்தில் மிளிர்ந்து நிற்கும். அவர் வாழ்ந்த ஒவ்வொரு நாளையும், ஒவ்வொரு மணியையும் ஆண்டவன் திருவருளால் அளிக்கப்பட்ட தைரியத்தைக் கொண்டே அவர் கழித்தார். ஆபத்துக் காலங்களிலும் அவர் தைரியமாயிருந்தார்; இறப்பவர் முன்னிலையிலும் அவர் தைரியமா யிருந்தார்; பொய் பேசுவோர் எதிரிலும் அவர் தைரியமாக இருந்தார். அவரைப்போல் நாம் தைரிய சாலிகளாக வேண்டாமா? நோய் வாய்ப்பட்டு படுக்கையோடே படுக்கையாய்க் கிடக்கும்போது கூட அவர் வேலை செய்வதில் முனைந்து நின்றார். எத்தகைய வேலையாயிருந்த போதிலும், எவ்வளவு கடுமையான வேலையாக இருந்த போதிலும் அவர் அதில் அளவுக்கு மிஞ்சிய ஊக்கத்தைக் காட்டி உழைத்தார். "தூக்கத்தில் அதிக காலம் வீணாகி விட்டது" என்று கூச்சலிட்டுக் கொண்டு விடியற்காலை ஐந்து அல்லது ஆறு மணிக்கு அவர் எழுந்திருப்பார். எழுந்துவந்ன செய்வார்? இன்னும் சிறிது நேரம் தூங்கலாம் என்று படுத்துக் கொண்டிருக்கும் எங்களைத் தட்டியெழுப்புவார். "படிக்க எழுந்திருங்கள்; எழுத எழுந்திருங்கள்; சிந்திக்க எழுந்திருங்கள்; வேலை செய்ய எழுந்திருங்கள்; இவைகளில் விருப்பமில்லாவிட்டால் சூரியனை வரவேற்க வேணும் எழுந்திருங்கள்" என்று எங்களை அறை கூவி அழைப்பார். அவருடைய செய்கை, அவருடையபேச்சு அவருடைய பார்வை எங்களுக்கு தீர்க்கதரிசனமாக இருந்தன. அவருடைய செய்கை, எங்களுக்கு உழைக்கும் ஆற்றலை அளித்தது; அவருடைய பேச்சு எங்களுக்கு வீரத்தை ஊட்டியது; அவருடைய பார்வை எங்களுடைய வாழ்வில் ஓர் ஆனந்தத்தைத் தந்தது. ஸ்ரீமான் மைகல் காலின்ஸ் தமக்கு நேரும் கஷ்டங்களுக்காக வருந்துவதில்லை. தமது வேலைக்கு இடர் செய்வோரைக் குறை கூறுவதில்லை. அவருடைய நோக்கத்திலேயே கண்ணுங் கருத்துமாயிருப்பார்; அதை நிறைவேற்றுவதிலேயே தம் தைரியத்தைச் செலவழிப்பார், அவரிடத்தில் தன்னம்பிக்கை குடிகொண் டிருந்தது. அந்தத் தன்னம்பிக்கை விருத்தியாகி அதைத் தமதுநாட்டின்பொருட்டு அறுபவத்துக்குக் கொண்டு வரும் விஷயத்தில் தம்மோடு நேசித்தவர் என்றும் தமக்கு விரோதமான கட்சியைச் சேர்ந்தவரென்றும் அவர் வேற்றுமை பாராட்டியதேயில்லை."

இந்தச் செம்மொழிகளைக் கேட்ட ஆண்மை நிறைந்தவருக்கு எவ்வித உணர்ச்சி உண்டாயிருக்கும் என்பதை நாம் கூறவேண்டுவதில்லை. ஆனால் இச்சமயத்தில் 1915-ம் வருஷம் பிப்ரவரி மாதம் ஸ்ரீமான் கோபாலகிருஷ்ண கோகலே இறந்ததும், அவரது சவம் இந்நாட்டில் கிடத்தப்பட்டிருந்த காலை திலகர் பெருமான் செய்த உபந்நியாசத்தை எடுத்துக் காட்டாமலிருக்க முடியவில்லை. அது வருமாறு:—

"சந்தோஷப் படுவதற்கு இது காலமன்று. இது கண்ணீர் விடுங்காலம், ஸ்ரீமான் கோகலே இறந்துபோன நஷ்டத்தினால் நாம் கொண்டிருக்கும் விசனத்தை வெளிப்படுத்துங் காலம், இந்த இந்தியாவின் மாணிக்கம், மஹாராஷ்டிரத்தின் ஆபரணம், உழைப்பாளிகளின் சவலர் இப்பொழுது ஓகோட்டில் நீண்ட சிரமபரிகாரம் செய்துகொண்டிருக்கிறார். அவரைப் பாருங்கள்; அவரைப் பின்பற்றமுயலுங்கள். ஸ்ரீமான் கோகலே, யாவருக்கும் திருப்தியாகத் தம் வேலையைச் செய்துவிட்டு இப்பொழுது நம் மத்தியினின்று நீங்கிவிட்டார். இங்குள்ள யாராவது அவருக்குப் பதிலாகத் தேசத்திற்கு நன்மைசெய்ய முன் வருவாரா? தமதுபெயர் என்றும் அழியா திருக்கும்படி செய்துவிட்டு, இப்பொழுது ஒரு வெற்றி வீரனைப்போல் அவர் வெளிச் செல்கிறார். இங்குக் கூடியிருப்பவர்கள் மாத்திரம் அல்ல—இந்தியாவிலுள்ள எந்த மனிதனும், தன் தாய் நாட்டிற்குச் செய்யவேண்டியவைகளைச் சரியாகச் செய்ததாக அடுத்த உலகத்தில் கடவுள்முன் திருப்தியாகச் சொல்ல முடியாது. இதுகாறும் ஒரு சிலரே தாங்கள் செய்த உண்மை உழைப்பைப் பற்றிக் கடவுள்முன் சொல்லும்படியான பாக்கியத்தைப் பெற்றிருக்கின்றனர். ஸ்ரீமான் கோகலேயை அவருடைய இளமையிலிருந்து நான் அறிவேன். ஆரம்பமுதல் அவர் சாதாரண மனிதராகவே இருந்தார். அவர் இனும்தாரரா யில்லை; ஜாகீர்தாரரா யில்லை; ஒரு தலைவரா யில்லை. இங்குக் கூடியிருக்கும் நம்மெல்லோரையும் போல் அவர் சாதாரண மனிதராக இருந்தார். அவர் முன்னுக்கு வந்ததெல்லாம் அவருடைய அறிவினாலும், திறமையினாலும், உழைப்பினாலுமே. ஸ்ரீமான் கோகலே நமது மத்தியினின்றும் இப்பொழுது நீங்கிவிட்டார். ஆனால் அவரிடம் இன்று நாம் கற்றுக் கொள்ள வேண்டிய பல அமிசங்களை விட்டுச் சென்றிருக்கிறார். இங்குள்ள ஒவ்வொருவரும் அவரையே வழி காட்டியாகக் கொள்ளவேண்டும். அவரைப் பின்பற்றி நீங்கள் நடந்து ஒழுகுவீர்களானால் அவர் அடுத்த உலகத்திலும் சந்தோஷமுற் றிருப்பார்."

இந்த இரண்டு இன்பமொழிகளும் தேசபக்தர்களுக்கு வழிகாட்டியிருக்க வேண்டுமென்று பெரிதும் விரும்புகிறோம்.

## சீர்திருத்தக்காரர்களின் வருத்தம்

மாண்டேகு செம்ஸ்பர்ட் சீர்திருத்தம் பூத்துக் காய்த்து இனிய கனிகளை உதவும் என்று மிதவாதிகள் எதிர்பார்த்தார்கள்; ஆனால்இப்பொழுதோ அச்சீர்திருத்தக்கனிகளின் துவர்ப்பை நுகர்கிறார்கள். சீர்திருத்தங்களின் மூலமாக இந்தியாவின் வளமையைப் பெருக்கலாம்; ஜனங்களின் ஆயுளை விருத்தியாக்கலாம் என்று இவர்கள் எண்ணியிருந்தார்கள். ஆனால்—? ஆனால்—?



சீர்திருத்தத்தின் பயனாக அச்சுச் சட்டம் தொலைந்து விட்டதென்று பெண்டமையார் உள்ளிட்ட ஒத்துழைப்புக்காரர்கள் களிக் கூத்தாடினார்கள். ஆனால் சுதேச மன்னர்கள் பிரிட்டிஷ் இந்தியாவில் வெளியாகும் பத்திரிகைகளின் தூஷணைக்குட்படா தவாறிருக்க ஒரு புதிய சட்டத்தை ஸர் வில்லியம் வின்சென்ட் இந்தியச் சட்டசபையில் கொண்டு வந்தார். ஆனால் இந்தியச் சட்ட சபையார் இச்சட்டம் அமுலுக்குக் கொண்டு வரக் கூடாதென்று நிராகரித்துவிட்டனர். சீர்திருத்தச் சட்டத்தின் 67 (பி) பிரிவின்படி இராஜப் பிரதிநிதி தமக்குக் கிடைத்துள்ள அதிகாரத்தைக் கொண்டு இந்தச் சட்டத்தை இராஜ்யசபையின் ஆலோசனைக்குக் கொண்டுவரலாமென்று உத்தரவிட்டனர். இராஜப் பிரதிநிதி தமக்குள்ள அதிகாரத்தை உபயோகித்தது இதுவே முதல்தடவை ஸ்ரீமான் அரங்காசாரியார் இது சம்பந்தமாக ஆலோசிக்கச்சபையைத்தள்ளிவைக்க வேண்டுமென்று இந்தியச் சட்டசபையில் ஒருபிரரேபணை கொண்டுவந்தார், ஆனால் ஸர் வில்லியம்வின்செண்ட் இப்பிரரேபணையை எதிர்த்துப் பேசினர். இவ்விஷயத்தைப்பற்றியோசிக்க இராஜ்ய சபையும் இந்தியச் சட்டசபையும் ஒன்று கூடி ஆலோசிக்கலாமென்று இந்தியச் சட்டசபையின் தலைவர் கூற ஸ்ரீமான் அரங்காச்சாரியார் முதலிய அங்கத்தினர்அடங்கிவிட்டனர். சட்ட சபைகளுக்குள் சென்று தமது கோரிக்கைகளைப் பூர்த்தி செய்துகொள்ளலாம் என்று கூறிய தேசிய வாதிகள் இப்பொழுது என்ன கூறுவார்கள்? சட்டசபையினர் நிறைவேற்றும் தீர்மானங்களை இராஜப் பிரதிநிதி அடிக்கடி நிராகரித்துக் கொண்டிருக்க முடியாது என்று இந்தத் தேசியவாதிகள் கூறுகிறார்கள். இந்தியச் சட்டசபையின் விருப்பத்துக்கு விரோதமாக லார்ட் ரெடிங் நடப்பார் என்று எவரும் எண்ணியிருக்க மாட்டார். ஆனால் அவர் இப்பொழுது தமக்குள்ள அதிகாரத்தை உபயோகித்ததைக் குறித்து நாம் ஆச்சரியப்படவில்லை. சீர்திருத்தம் அந்தத் தன்மையில் அமைக்கப்பட்டிருக்கிறது. அதற்காக இராஜப் பிரதிநிதி மேல் குற்றங் கூறுவது அறியாமையாகும். இதற்காகவே, சீர்திருத்தங்களினால் எவ்வித பயனும் உண்டாகாதென்று நாம் பறைசாற்றி வருகிறோம். ஆயினும் மிதவாதிகளுக்குச் சீர்திருத்த மயக்கம் இன்னுந் தெளியவில்லை.

பின் வந்த ஒரு செய்தியால் மேற்கூறப்பட்ட சட்டம் இராஜ்ய சபையில் கொண்டு வரப்பட்டு நிறைவேற்றப்பட்டதென்று அறிகிறோம். இனி இந்தியச் சட்டசபையினர் என்ன செய்யப்போகிறார்? ஏன் இந்தச் சபைக்கு வந்தோம் என்று ஏங்கித் தலை குனிந்த வண்ணம் நிற்பரோ? அந்தோ! மிதவாதிகளே! இரங்குகிறோம். அறிவிலும் வயதிலும் அநுபவத்திலும் மூத்தவரான இராஜ்ய சபையார் உங்களுடைய கிராகரிப்புக்கு என்ன மதிப்புக் கொடுத்தார்? அவரும் உங்கள் நாட்டவரே! உங்களைப் போன்ற மிதவாதிகளே! இனி நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்? சுயமரியாதையுள்ளவர்களாயிருந்தால் உடனே உங்கள் பதவிகளினின்றும் விலகுவீர்களா?

மாப்பிள்ளைக் கைதிகள் மூடி வண்டியில் இறந்ததற்குக் காரணர்களாயிருந்த பெரிய உத்தியோகஸ்தர்களையும் தண்டிக்க வேண்டுமென்று இந்தியச் சட்ட சபையில் ஒரு தீர்மானம் கொண்டு வரப்பட்டது. ஆனால் இது ஸ்ரீமான்கள் அரங்காச்சாரியார், சர்வாதிகாரி முதலிய மிதவாத சிகாமணிகள் வைத்த கருணையினால் தோற்றுப் போய்விட்டது. குற்றவாளிகள் என்று தெரிந்திருந்தும் அவர்களைத் தண்டிக்க ஒருப்படாத இந்தச் சட்டசபையிலிருந்து என்ன நன்மைகளை எதிர் பார்க்கலாம் என்பதை நாம் கூற வேண்டுவதில்லை. ஆனால் இத்தீர்மானத்தை எதிர்க்கும் வாயிலாக ஸர் வில்லியம் வின்செண்ட் சில அங்கத்தினர்களைத் தூற்றியதைக்கௌரவமுள்ள - ஆனால் சுய மரியாதையற்ற - இந்திய அங்கத்தினர்கள் மௌனமாயிருந்து கேட்டுக் கொண்டிருந்ததை நாம் கண்டியாமலிருக்க முடியவில்லை. வாதத்தில் தோற்றுப் போவோம் என்று தெரிந்தால் வசை மொழிகளை உபயோகிப்பது என்ற முறையைச் சிலர் கையாள்வது வழக்கம். இவ்வழியைச் சிலகாலமாக ஸர் வில்லியம் வின்சண்ட் பின்பற்றி நடக்கிறார் என்பது அனைவரும் அறிந்த விஷயம். ஆனால் அவர்மீது குற்றஞ் சுமத்துவதற்கில்லை. அவரை அவ்வப்பொழுதுகண்டியாமலிருந்தஇந்திய அங்கத்தினர்களைக் குறித்து நாம் வருந்துகிறோம். ஆனால்இப்பொழுதுஜனப்பிரதிநிதிகள் என்று அமர்ந்திருப்போரிடத்தில் இந்தச் செயலை எங்ஙனம் எதிர்பார்க்கலாம் என்று ஒருவர் கேட்கிறார், அஃதுவும் உண்மையே.

சீர்திருத்தச் சட்டசபையின் உண்மை அதிகாரம் இப்பொழுது புலனாகி விட்டது. இனியேனும்ஒத்துழைப்புக்காரர்களுக்கு அவைகளின் மீதுள்ள மோகம் ஒழியுமோ?

## தாஸரின் தேசப்பிரஷ்டம்

இயற்கை தேவியின் இதய கமலமாக விளங்கும் காஷ்மீர தேசத்தின் ஆட்சி முறை பாராட்டக் கூடிய தன்மையில் இல்லையென்று ஸ்ரீமான் தி. வி. சேஷகிரி ஐயர், சில மாதங்களுக்குமுன் ஹிந்துப் பத்திரிகையில் எழுதிய வியாசமொன்றில் குறிப்பிட்டிருந்தார். அக்கூற்று இப்பொழுது உண்மையாகி விட்டது. தேசபந்து தாஸர் சில காலமாக நோய்வாய்ப்பட்டிருக்கிறார் என்பதை அனைவரும் அறிந்திருப்பர், அவரும் பாட்னா உயர்தர நீதிபதியான ஸ்ரீமான் பி. ஆர். தாஸும் அவருடைய மனைவியும் ஸ்ரீமான் தாஸரின் மனைவியும் மகளும் மருமகனும் உட்பட்ட அவருடைய குடும்பத்தாரும் தேக சௌக்கியத்திற்காகக் காஸ்மீரத்திற்குச் சென்றார்கள். செல்லும் வழியில் செப்டம்பர் மாதம் இருபதாந் தேதி மர்ரி என்ற ஊரிலுள்ள பிரயாணிகள் விடுதியில் தங்கியிருந்த போது காஸ்மீர்சமஸ்தானத்தின்போலீஸ் டிப்டி சூப்ரண்டெண்ட் அங்கு வந்து, தேக சௌக்கியத்திற்காகவே காஸ்மீரத்திற்கு வருவதாகவும், அரசியல் விஷயங்களில் எவ்விதத்திலும் சம்பந்தப்படுவதில்லை யென்றும் ஓர் உறுதிமொழிப் பத்திரம் எழுதிக் கொடுக்க வேண்டுமென்று ஸ்ரீமான் தாஸரைக்கேட்டார் ஆனால் ஸ்ரீமான் தாஸர் அதற்கு மறுத்துவிட்டார் பிறகு ஸ்ரீமான் தாஸர் தமது குடும்பத்தாருடன் பாராமூலா என்ற ஊருக்குச் சென்றார். அங்கு, மேற் கூறப்பட்ட மாதிரி உறுதிமொழிப் பத்திரம் எழுதிக் கொடுத்தாலன்றி, சமஸ்தான எல்லைக்குள் இருக்கக் கூடாதென்று ஓர் உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. ஆனால் ஸ்ரீமான் தாஸர் மேற்காணப்பட்டவாறு உறுதிமொழிப் பத்திரம் எழுதிக் கொடுக்க முடியாதென்று மறுத்துத் திரும்பிவிட்டார். சுய மரியாதையுள்ளவர் வேறு என்ன செய்ய முடியும்? ஸ்ரீமான் தாஸர் அதிக சுரத்தால் வருந்திக் கொண்டிருக்கிறார் என்று அறிகிறோம். காஸ்மீர சமஸ்தானத்தாரின் கருணையை நாம் என்னென்று கூறுவது? காஸ்மீர அரசாங்கத்தார் சட்டத்தைக் கவனிக்க வேண்டாம்; தாஸரின் அரசியலைக் கவனிக்க வேண்டாம்; இந்திய அரசாங்கத்தார் தாஸரைப்பற்றி என்ன அபிப்பிராயம் கொண்டிருக்கிறார் என்பதைக் கவனிக்க வேண்டாம். மானிட தருமத்தைக் கவனிக்கக் கூடாதா? ஒரு பெரியார் - சநாதன ஹிந்து-நோய் வாய்ப்பட்டுக் கிடக்கிறார். தேக சௌக்கியத்திற்காகத் தமது நாட்டிற்கு வந்தால் அவரைத் தடுப்பது கருணையா? காஸ்மீரமன்னர்வைதிகர் என்றும், ஹிந்து மதத்தில் உண்மையான பக்தியுடையவரென்றும் கேள்விப் படுகிறோம். இவர் செய்யும் பூசை புஷ்பங்கள் அரண்மனைக்குநாமையிலுள்ள ஆற்றில் மலை மலையாக மிதந்து செல்லும் என்றுசொல்லப்படுகிறது. இஃதுண்மையானால், ஒரு தேசபக்தரைப்பிரஷ்டம் செய்வதுதான் பூசையா என்ற ஒரு கேள்வியைமட்டும் ஈண்டுப் பொறிக்க விரும்புகிறோம்.

## இடியேறு

### "நரக வாசல்"?

எகிப்தின் தேசீயத் தலைவரான ஜக்லுல் பாஷாவைப் பிரிட்டிஷ் அதிகாரிகள் செய்செல்லெஸ் என்ற ஓர் இடத்தில் காப்பில் வைத்திருக்கின்றனர் என்பது அனைவரும் அறிந்த விஷயம். அந்த இடம் எத்தகைத்து என்பதைப்பற்றி "மான் செஸ்டர் கார்டியன்" பத்திரிகைக்கு ஒருவர் பின் வருமாறு எழுதுகிறார்:—

"அது நரகத்திற்கு ஒரு வழியென்று கூறலாம். மூன்று வாரம் அங்குக் கழித்தேன். அங்கிருந்து வெளிவந்ததும் மோட்சத்திற்குச் செல்வதைப்போலிருக்கிறது. அந்த இடத்தைச்சுற்றி ஏராளமான பெரிய தேள்கள் இருக்கின்றன"

இத்தகைய இடத்தில் எகிப்தின் விக்கிரமாகப் போற்றப்பட்டு வரும் ஜக்லுல் பாஷா பிரிட்டிஷ் அதிகாரிகளால் அடைக்கப்பட்டிருக்கிறார். இதே பிரிட்டிஷார், நப்போலியனை செண்ட்ஹெலினா தீவில் அடைத்து வைத்தனர் என்பதை மட்டும் நேயர்களுக்கு ஞாபகப்படுத்துகிறோம்.

### நின்று விட்டது

கிரேட் பிரிட்டனுக்கும் துருக்கிக்கும் எங்கு போர்மூண்டு விடுமோ என்று பலர் கவலை கொண்டிருந்தனர். ஆனால் ஆண்டவன் அருளால் யுத்தம் ஏற்படாதென்று செய்திகள் கிடைத்தது ஆறுதலைத் தந்தது. முஸ்தபா கெமால்பாஷா நடு நிலைமைப் பிரதேசங்களின் சம்பந்தமாக மகாநாட்டில் யோசிக்கலாமென்று கூறியிருக்கிறார். திரேஸைத் தம் வசம் ஒப்புவிக்க வேண்டுமென்பதில் அவர் சிறிதும் பின் வாங்குவதாகத் தெரியவில்லை. வெனிஸ் என்ற இடத்தில்இது சம்பந்தமாகமகாநாடுகூட்டத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. முஸ்தபா கெமால் பாஷாதமது கட்சியை மகாநாட்டிலெடுத்துச் சொல்வதற்கு ஒதுப்பட்டதை குறிப்பிடத்தக்கது. பிரான்ஸ், இத்தாலி முதலிய தேசங்கள் முஸ்தபா கெமாலுடன் சமாதானமாகப் போகலாம் என்று ஆதிமுதல் கூறிக்கொண்டு வந்த போதிலும் பிரிட்டிஷார் குடியேற்ற நாடுகளின் உதவியை நாடினர். முதலில் அவசரப்பட்டதின் வீணென்பதை இப்பொழுதேனும் இவர் உணர்ந்திருப்பர் என்று கருதுகிறோம். விரைவில் துருக்கிக்கும் ஐரோப்பிய வல்லரசுகளுக்கும் சமாதானம் உண்டாக வேண்டுமென்று விரும்புகிறோம்.

### ஆந்திரரின் உறுதி

சித்தூரில் கூடிய ஆந்திர மாகாண மகாநாட்டார் சட்டசபைகளுக்குள் நுழைந்து வேலை செய்ய வேண்டுமென்பதைக் கண்டித்து ஒத்துழையா தமதத்தை இப்பொழுதுள்ளபடி நடத்திச் செல்ல வேண்டுமென்றும் ஒரு தீர்மானம்நிறைவேற்றியிருக்கின்றனர் சட்டசபைக்குள் சென்று வேலை செய்ய வேண்டுமென்ற வாதம் இத்தீர்மானத்திடையே நுழைக்கப்பட்டதென்றும் ஆனால் பெரும்பாலோர் அவ்வாதத்தை அங்கீகரிக்கவில்லையென்றும் அறிகிறோம். சட்டசபைகளின் பயனின்மையை அடிக்கடி எடுத்துக் காட்டியிருக்கும் நாம், ஆந்திர மாகாண மகாநாட்டாருடைய உறுதியைப் போற்றுகிறோம். சமீபத்தில் இந்தியச் சட்டசபையார் சுதேச மன்னர்கள் பாதுகாப்பு மசோதாவை நிராகரித்து விட்டதைக் குறித்து இராஜப் பிரதிநிதி நடந்து கொண்ட மாதிரியைக் கண்டும் தேசிய வாதிகள் சட்டசபையில் நுழைய விரும்புகிறார்களா?

### மோஹன் இயக்கம்

ஸ்ரீ மோஹன் நாயுடு என்பவர் சில மாத காலமாகச் சென்னையில் பல விடங்களில் உடலோம்பலைப் பற்றிப் பல அரிய உபந்நியாசங்கள் செய்து வருகிறார். சென்ற வாரம் சௌந்தர்ய மஹாலிலும் கெல்லட் மண்டபத்திலும் அவர் இல்வாழ்க்கையைப் பற்றி அறிஞர் போற்றத்தகுந்த உபந்நியாசங்கள்செய்தார். இந்திய நாகரிகத்துக்கு உயிராக எழுந்த காந்தியடிகள் இயக்கத்துக்குஸ்ரீ மோஹன் இயக்கம் உடலாகத் துணை செய்யுமென்று ஊகிக்கலாம். மோஹன் செய்யும் உடலோம்பல் உபந்நியாசம் நமது நாட்டின் வளர்ச்சிக்கு இன்றியமையாதது. அவர் குறிக்கும் முறைகள் நமது தேசத்துக்குரியன. அவரால் பல நூல்கள் எழுதப்பட வேண்டுமென்பது எமது கோரிக்கை.

### "பணம்"

திரிசிரபுரத்தினின்று வெள்ளிக்கிழமைதோறும் வரும் இந்த வாரப்பத்திரிகையில் பல அரிய விஷயங்கள் பொறித்து கிடக்கின்றன. ஸ்ரீமான் எஸ். ஜி. இராமானுஜலு நாயுடு இதற்கு ஆசிரியராவர். இதன் வருஷ சந்தா ஐந்து ரூபாய்.

### கந்தசாமி நிலை

ஸ்ரீமான் ஒ. கந்தசாமிச் செட்டியார் இன்னார் என்பதைத் தமிழுலகுக்கு விரித்துக் கூற வேண்டுவதில்லை. 'ஸோஷியல் ரிபார்ம் அட்வோகேட்' என்னும் வாளாயுதம் தாங்கி நம்முன்னோர்கள் கண்ட தருமமுறைகளை அறவே வீசப் புறப்பட்ட அறிஞர் இவர்தான். தமிழ் நாட்டிலுள்ள பிராமணர்களையும் சுய ஆட்சிக்காரர்களையும் தொலைக்க 'ஜஸ்டிஸ்' கட்சியை எழுப்பினவருள் நமது செட்டியாரும் ஒருவர். இப்பொழுது ஓ. கந்தசாமியின் 'ஸோஷியல் ரிபார்ம் அட்வோகேட்' எங்கே? 'ஜஸ்டிஸ்'கட்சியெங்கே? அந்தோ! பாவம் சிதம்பரத்தில் நந்தனார் மடத்தில் ஓமகுளத்தருகில் பாவமன்னிப்பு அறிக்கை செய்திருக்கிறார் செட்டியார். பிராமணரே பிராமணரே என்று ஓலமிடுகிறார். ஓலம் மெய்யான ஓலமா என்று ஐயுறுகிறார் பலர். 'ஜஸ்டிஸ்' கட்சியைக் கிளப்பினதால் தமக்கு ஒரு பதவியுங் கிடைக்கவில்லையே என்ற அழுக்காறால் மனம் புழுங்குகிறார் கந்தசாமி செட்டியார் என்று 'ஜஸ்டிஸ்' கட்சியார் கதையாடுகிறார். ஆயினுஞ் இனும் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவப் பைத்தியம் செட்டியாரைவிடவில்லை. அதிகாரவர்க்க ஆட்சிமுறை செட்டியாருக்குக் கசப்பாக என்று தோன்றும்? செட்டியார் நிலைக்கு இரங்குகிறோம்.

### லார்ட் ரெடிங் விலகுகிறாரா?

லார்ட் ரெடிங் கூடிய விரைவில் தம் பதவியினின்று விலகப்போகிறார் என்றும் அவருக்குப் பதில் ஸ்ரீமான் ஆஸ்டின் சேம்பர்லேன்-"ஒன்றுந்தெரியாத செம்பர்லேன்"—இராஜப் பிரதிநிதி பதவிக்கு நியமிக்கப் படுவார் என்றும் ஒருவதந்தி கிளம்பியிருக்கிறது. இந்தியா அரசாங்கத்தாருக்கும் இந்தியா மந்திரிச் சபையாருக்கும் அபிப்பிராய பேதம் முற்றிவருவதாகச் சொல்லப்பட்டதற்கும் இந்த வதந்திக்கும் ஏதேனும் சம்பந்தமிருக்கிறதா?

### தமிழ்நாட்டார் கவனிக்க

காலை முப்பதாந் தேதி திரிசிராப்பள்ளியில் தமிழ் நாட்டுக் காங்கிரஸ் கமிட்டியார் நகல் விதிகளைப்பற்றி ஆலோசிக்கக் கூட்டங்கூடுகின்றார். அதில் தமிழ் நாட்டுக் காங்கிரஸ் கமிட்டியின் பெயரை "தமிழ் நாட்டு மாகாணக் காங்கிரஸ் கமிட்டி" என்று மாற்றப் போவதாகத் தெரிகிறது. "தமிழ் நாட்டு காங்கிரஸ் கமிட்டி" என்பதுவே இருத்தல் வேண்டும்; அல்லது "தமிழ் மாகாண காங்கிரஸ் கமிட்டி" என்பதுவே இருத்தல் வேண்டும். "தமிழ் நாட்டு மாகாண காங்கிரஸ் கமிட்டி" என்று அழைப்பது எவ்விதத்திலும் பொருந்தாது. நாடு என்பதற்கும் மாகாணம் என்பதற்கும் என்ன வேற்றுமை இருக்கிறது? நாடு என்பதையும் மாகாணம் என்பதையும் பிணைத்துப் போவது தமிழர் சேவிக்கு இன்பம் பயவாது; இதில் பொருளுமில்லை. தமிழ் நாட்டார் இதனைக் கவனித்தல் வேண்டும்.

### டாடா தொழிற்சாலை வேலை நிறுத்தம்

ஜாம்ஷட்பூரிலுள்ள டாடா கம்பெனி தொழிற்சாலையைச் சேர்ந்த 20 ஆயிரம் தொழிலாளர்கள் வேலையினின்று நீக்கப்பட்ட சிலர் வேலைக்குவைத்துக் கொள்ளாமைக்காகவும் தாங்கள் கேட்ட சம்பளவுயர்வுமுதலியனகொடுக்கப்படாமைக்காகவும் இன்னும்சில குறைகள் நிவர்த்திக்கப்படாமைக்காகவும் சென்ற வாரத்தில் வேலை நிறுத்தம்செய்து விட்டார்கள். கம்பெனியார் ஒருநோட்டீஸ் பிறப்பித்து 25-ந் தேதியில் வேலைக்குத் திரும்பி வாராதவர்கள் நிரந்தரமாக வேலையினின்று நீக்கப்பட்டு விடுவார்கள் என்று குறிப்பிடவே பெரும்பாலான கூலிகள் ஒரு சில கணிதர்கள், பலமேஸ்திரிகள் ஆகிய இவர்கள் (சுமார் 4500) பேர் வேலைக்குத் திரும்பி விட்டிருக்கிறார்கள். கம்பெனியின் தொழிற்சாலை போலீஸ் இராணுவ பந்தோபஸ்துடன் இருந்து வருகிறது.

# அகாலியர் சச்சரவு

## குருகாபாக் நிகழ்ச்சிகள்

அகாலியர்கள் தாங்கள் செய்வது மத சம்பந்தமான சச்சரவாகுமென்று கருதி எத்தகைய இடையூறுகளுக் கிடையிலும் அஹிம்சையையே பூஷணமாகக் கொண்டு காரியங்களைச் செய்து வருகின்றனர். செப்டம்பர் 20, 22-ந் தேதிகளில் கைதியாக்கப்பட்ட நாற்பது அகாலியர்களின் வழக்குகள் இம்மாதம் 23-ந் தேதியில் அமிர்தசரஸ் ரெவினியு அஸிஸ்டண்ட் உத்தியோகஸ்தர் முன்னிலையில் நடைபெற்றன. அன்னார் ஒவ்வொருவருக்கும் மூன்று மாதக் கடுங்காவல் தண்டனை விதித்தார். 22-ந் தேதியில் தண்டிக்கப்பட்ட 118 அகாலியர்கள் மாண்ட் கோமரி சிறைச்சாலைக்கு அனுப்பப்பட்டார்கள். ஸ்ரீமான் மாலிக்லால்கான் என்பார் மீது பஞ்சாப் அதிகாரிகள் ஜி. பு. கோ 108-வது பிரிவுபடி உத்தரவு பிறப்பித்து 2 ஆயிரம் ரூபா ஜாமீன் கொடுக்கவேண்டுமென்று சட்டளையிட்டார்கள். ஆனால் ஸ்ரீமான் மாலிக்லால்கான் ஜாமீன் கொடுக்க மறுத்து விட்டு சிறைக்குச் சென்றுள்ளார்.

சென்ற 23, 24-ந் தேதிகளில் அமிர்தசரசில் சுமார் நூறு அகாலியர்கள் குருகாபாக் விஷயம் சம்பந்தமாக பல் வேறு சிறு தண்டனைகளுக்கு உட்படுத்தப்பட்டார்கள்.

பஞ்சாப் மாஜி இராணுவ உத்தியோகஸ்தர்களின் சங்கத் தலைவரான ரிசால்தார் அனுப்சிங் என்பார் பத்திரிகைகள் மூலமாய் மாஜி இராணுவ உத்தியோகஸ்தர்களும் தேசிய இயக்கத் தலைவர்களுடன் சேர்ந்து உழைக்க வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்துள்ளார். தம் அநுபவத்தால், மாஜி இராணுவ வீரர்கள் தேசியத் தலைவர்களுடன் சேர்ந்து உழைப்பதனால் ஜனங்களுக்கு இகபர சாதனங்களைச் செய்ய முடியுமென்று கண்டு கொண்டதாக அன்னார் குறிப்பிடுகிறார்.

ஜண்டாலி என்ற கிராமத்தைச் சேர்ந்த பாய் ஹர்நாம்சிங் என்பார் சென்ற செப்டம்பர் 19-ந் தேதியில் அமிர்தசரசுக்கு வந்து கொண்டிருக்கையில் கர்தம்பூர் ரெயில்வே ஸ்டேஷனில் போலீஸாரால் வழி மறிக்கப்பட்டு அவரிடமிருந்த 31 ரூபா ரெயில்வே டிக்கெட் ஆகிய இவைகள் களவாடப்பட்டு ஸ்டேஷனை விட்டு வெளியே தூரத்தப்பட்டார் என்று குருத்வார பிரபந்தக் கமிட்டியின் அறிக்கையொன்று கூறுகிறது.

போலீஸார் புடைத்ததன் பயனாய் ஓர் அகாலியருடைய கண் வெளியே வந்து விட்டது என்று முன்னர் கூறப்பட்டிருந்தது உண்மையல்லவென்று தற்போதைய செய்திகளால் தெரிய வருகின்றது.

மகர்துவின் நிலத்திற்குள் நுழைந்து கட்டை வெட்ட முயற்சித்த 40 அகாலியர்கள் சென்ற 25-ந் தேதியில் கைதியாக்கப்பட்டார்கள். இவர்களில் சிலர் போலீசாரால் உதைக்கப்பட்டார்களென்றும் தெரிகிறது. குருகாபாக் சம்பவங்களைப் பற்றி விசாரணை செய்வதற்காக அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் காரியக் கமிட்டியார் ஸ்ரீமான் எஸ். ஸ்ரீநிவாச ஐயங்காரின் தலைமையில் ஒரு கமிட்டியை நியமித்தனர் என்பதை நேயர்கள் அறிவர். ஸ்ரீமான் ஸ்ரீநிவாச ஐயங்கார் கமிட்டியின் தலைவர் பதவியை ஏற்றுக்கொண்டார். இவர் அக்டோபர் முதல் தேதியில் அமிர்தசரஸ் போய்ச் சேர்வர். கமிட்டியார் அக்டோபர் 2-ந் தேதியில் தங்கள் விசாரணையை நடத்துவார்கள். மதுரை இராமநாதபுரம் ஜில்லா மகாநாட்டாரும் அகாலியர்கள் எத்தகைய கோபமூட்டப்பட்ட காலையிலும் சாந்தத்தையே பூஷணமாகக் கொண்டு பிறருக்குச் சாந்தத்தின் மகிமையை உணர்த்துவதை மெச்சி ஒரு தீர்மானம் நிறைவேற்றியுள்ளார்கள்.

ஜபல்பூர் ஸ்திரீகளும் ஒரு கூட்டங்கூடி அகாலியர்களின் அஹிம்சா தர்மத்தை மெச்சி குருகாபாக்கில் காயமடைந்தவர்களுக்காக 50 ரூபா நன்கொடையளித்துள்ளார்கள்.

சுவாமி சிரதாநந்தரின் வழக்கு சென்ற 22-ந் தேதியில் திரும்பவும் ஆரம்பமாகி 27-ந் தேதிக்குத் தள்ளிப்போடப்பட்டது. முடிவு இன்னும் தெரியவில்லை. சர்தார் மேதாப்சிங் முதலியோரின் வழக்கு நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.

குருகாபாக்கில் வைக்கப்பட்டிருக்கும் போலீஸ்காரர்கள் ஏராளமாகத் தோட்டத்தினின்று கட்டை வெட்டுகிறார்கள் என்று குருத்வாரப் பிரபந்தக்கமிட்டி அறிக்கை கூறுகிறது.

# கெமால்பாஷா

## துருக்கியர்களின் தலைவர்

### ஜெனரல் டௌன்ஷெண்டின் அபிப்ராயம்

மேஜர் ஜெனரல் ஸி. டௌன்ஷெண்ட் என்பார் டைம்ஸ் பத்திரிகையில் கெமால் பாஷாவைப்பற்றி எழுதுவது வருமாறு:—

துருக்கியர்களின் தலைவராய் இருக்கும் கெமால்பாஷா, ஊடுருவிப்பாயும் நீல நிறக் கண்களையும், அழகான தலை மயிரையும் நெருங்க வெட்டப்பட்ட தாடியையும் உடையவராவர். இவரை நான் ஒரு மாதத்திற்கு முன் கோனியா எனுமிடத்தில் நேராகவே சந்தித்தேன். இவர் நடுத்தர உயரமானவராய் இருக்கிறார். நான் அவரைச் சந்தித்த காலையில் அவர் சாதாரண உடைகளையே அணிந்து கொண்டிருந்தார். சால் சட்டைகளையும், மேற் ஜோடுகளையும் தலையில் நீண்டதான 'கால்பக்' என்ற தலையணியையும் அணிந்துக்கொண்டிருந்தார்.

நான் அறிந்தமட்டில் கெமால்பாட்சாவை இராணுவ வீரர்களும், மற்ற பொது ஜனங்களும் வெகுவாய்க் கொண்டாடுகிறார்கள். கெமாலியர்களுக்குள் அபிப்ராய பேதங்கள் இருக்கின்றன என்று பிரசாரகர்கள் கட்டிவிடும் கதைகளுக்கு ஆதாரம் கிடையாது. கோன்ஸ்தாந்தி நோபிலில் நூற்றுக்குத் தொண்ணூறு பேர் கெமால் பாட்சாவின் கட்சியைச்சேர்ந்தவர்களாயிருக்கின்றனர். அனடோலியாவில் இருக்கும் துருக்கியர்கள் அனைவரும் ஏகோபித்தமாக அவரையேஆதரிக்கின்றனர். அவர் இடும் கட்டளைகள்படி அனைவரும் எதிர்மாறு பேசாமல் நடந்து கொள்கின்றனர். இவருடைய ஆட்சி திறமையாகவே இருக்கிறது. தேசீய துருக்கியர்களின் அரசாங்கம் இவருடைய ஆளுகையில் கஷ்டமின்றியும் நன்றாகவும் நடைபெற்றுக்கொண்டு வருகிறது. இவர் இட்டதுதான் சட்டமாயிருக்கிறது.

கெமால்பாட்சா அதிகமாய்ப் பேசுவதே கிடையாது. தம்மை முக்கியமாய்ப் பொறுத்த விஷயங்களாயிருந்தாலல்லாமல் அதிகமாய்ப் பேச மாட்டார். முக்கியமான விஷயங்கள் யாதேனும் வந்தால் அப்போது அவர் திறம்பட செம்மையாகப் பேசுவார். ஒருநாள் இரவு அவர் என்னுடன் இராப்போஜனம் அருந்துகையில் 1805-ம் வருடத்தில் நெப்போலியன் ஆஸ்டர்லிட்ஸ் எனுமிடத்தில் செய்த சண்டையைப் பற்றிச் சம்பாஷித்தார். இச்சண்டையில் அநேக முக்கிய விஷயங்கள் அடங்கிக் கிடக்கின்றன.

நான் அவருடன் இராப்போஜனம் அருந்த சென்ற காலையில் நெப்போலியனின் சண்டைத் திறன்களைப் பற்றிப் பேசவேண்டி வருமென்று நான் நினைக்கவேயில்லை. நெப்போலியனின் சண்டை முறைகள் நூறு வருடங்களுக்கு முன் எப்படி முக்கியமாயிருந்தனவோ அதைப் போலவே இப்போதும் முக்கியமாய் இருக்கின்றன என்ற விஷயமாக இருவரும் ஒப்புக் கொண்டோம். கெமால்பாட்சா இராணுவ சரித்திரங்களை யெல்லாம் முறையாக உணர்ந்தவர்.

கெமால்பாட்சா எப்போதும் வேலை செய்து கொண்டேயிருப்பாரேயல்லாமல் சோம்பலாய் இருக்க மாட்டார். ஐரோப்பிய அரசியல் விஷயங்களையும் இதர விஷயங்களையும் இவர் செவ்வையாய் உணர்ந்திருக்கிறார். இவர் அநேக சண்டைகளில் திறம்பட சண்டை போட்டிருக்கிறார். திரிபோலி சண்டையின்போது தான் இவருடைய பெயர் பிரபலமாயிற்று.

யுத்த நிறுத்தத்திற்குப் பின்னர் மத்திய ஆசியாவிலுள்ள துருக்கியப்படையின் இன்ஸ்பெக்டர் ஜெனரலாய் இவர் நியமிக்கப்பட்டார். கோன்ஸ்தாந்தி நோபிலை நேச தேசத்தினர் தங்கள் வசமாக்கிக்கொண்டபோது துருக்கிய தேசீய வாதிகள் சண்டையிடலானார்கள். அப்போது தான் இவருடைய தேசபக்தி வெளிக்குவந்தது.

கெமால்பாட்சா தேசபக்தராவர். இவர் நோக்கம் எல்லாரும் சுதந்தரம் பெறவேண்டுமென்பது ஆகும். துருக்கி துருக்கியர்களுக்குச் சொந்தமுடையது என்ற கொள்கையினராவர். இவர் சன்னியமான சமாதானத்தை விரும்புகிறார். இவர் கிரேக்கர்கள் மத்திய ஆசியாவைக் காலிசெய்து விடுதல் இன்றியமையாத நிபந்தனை என்று கூறுகிறார்.

யுத்த நிறுத்தம் ஏற்பட்டிருக்கும்போதும் சென்ற வருடத்தில் லண்டன் மகாநாடுநடைபெற்றுக் கொண்டிருக்கும்போதும் கிரேக்கர்கள் திடீரென சண்டை ஆரம்பித்திருக்க சென்ற மார்ச் மாதத்தில் கூடிய பாரிஸ் மகாநாட்டில் கிரேக்கர்கள் நாலு மாதத்திற்குப் பின் காலி செய்து விடுவார்கள் என்பதை எப்படி நம்ப முடியுமென்று அவர் கூறுகிறார்.

சண்டை செய்ய கிரீஸ் செய்த ஏற்பாடுகள் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்குத் தெரியாதென்று நிலை நாட்ட முடியுமா என்று அவர் என்னைக் கேட்டார். அம்மாதிரி நிலை நாட்டினால் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் இஷ்டப்பட்டால் அச்சண்டையை நிறுத்தியிருக்க முடியுமென்பதைப் பொய்ப்பிக்க முடியுமா என்றும் அவர் என்னைக் கேட்டார்.

## தமிழ்நாட்டு மகாநாடு

திருப்பூரில் கூடப்போகும் தமிழ்நாட்டின் மகாநாட்டில் அக்கிராசனம் வகிக்க ஸ்ரீமான் சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார், டாக்டர் வரதராஜலு, ஸ்ரீமான் வ. வெ. சு. ஐயர் இம்மூவரும் மூறையே மறுத்துவிட்டது நேயர்கட்குத் தெரியும். இப்பொழுது டாக்டர் வரதராஜலு "தமிழ்நாடு" பத்திரிகையில் என் பெயரைக் குறிப்பிட்டிருக்கிறார். திருப்பூரிலுள்ள சில நண்பர்களும் என் மீது நோக்கஞ் செலுத்தி யிருக்கிறார்கள். ஒருவர் பின் ஒருவராக மூவர் மறுத்ததைக் கொண்டு என் சம்மதம் பெற்று என்னைத் தெரிந்தெடுக்க வேண்டுமென்று ஜில்லாக்களிலுள்ள சில அன்பர்கள் எனக்குக் கடிதங்களும் தந்திகளும் விடுத்துக் கொண்டே யிருக்கிறார்கள். கீழ்நாட்டு வழக்க ஒழுக்கங்களைப் பெரிதுங் கடைப்பிடித்து நடக்கும் எனது உள்ளக் கிடக்கையை இன்னும் என்னோடு நெருங்கிப் பழகியுள்ள நண்பர்கள் உணராமலிருப்பதைக் குறித்துப் பெரிதும் வருந்துகிறேன். வெள்ளம் வருமுன் அணைகோலுவது நலம். ஜில்லா காங்கரஸ் கூட்டங்கள் என் பெயரைக் குறிப்பிடாதிருக்குமென்று நம்புகிறேன். ஒரு வேளை ஜில்லா காங்கரஸ் கூட்டங்களிற் பெரும்பாலன என்னைத் தெரிந்தெடுத்தாலும் நான் இசைய இயலாமையை இப்பத்திரிகை வாயிலாக விண்ணப்பித்துக் கொள்கிறேன்.

திரு. வி. கலியாணசுந்தரன்.

## வேண்டுகோள்

மதராஸ் இராயப்பேட்டை 29-வது டிவிஷன் வரிசெலுத்துவோர்களுக்குத் தெரிவிப்பது என்னவென்றால்:—

இப்பொழுது கார்ப்பொரேஷன் ஆபீஸர்கள் ஷை இராயப்பேட்டை டிவிஷனிலுள்ள வீடுகளின் வரியை ரிவிஷன் செய்து கொண்டுவருகிறார்கள். அவர்கள், தாம் ரிவிஷன்செய்தபடி நோட்டீஸும் கொடுப்பார்கள். அந்த நோட்டீஸில் குறிக்கப்பட்டிருக்கும் வரி மிகவும் அதிகமென்றும், ரிவிஷனில் அதிகமாக உயர்த்தப்பட்டதென்றும் காணப்பட்டால், வரி நோட்டீஸ் கிடைத்த 15-தினத்திற்குள் டாக்ஸேஷன் பைனான்ஸ் கமிட்டிக்கு (Taxation and Finance Committee), கமிஷனர் துரை மூலமாக, அப்பீல் செய்து கொள்ளலாம். பழையபடி, உயர்த்தப்பட்ட வரிப்பணத்தை முன்னதாகச் செலுத்தவேண்டிய அவசியம் இல்லை. முன்னதாகச் செலுத்தாமலே அப்பீல் செய்யலாம். ஆனால் அந்த அப்பீலைக் கார்ப்பொரேஷன் ஆபீஸில் நோட்டீஸ் கிடைத்த 15 தினத்திற்குள் சேரும்படி ரிஜிஸ்டர்செய்து அனுப்பவேண்டும். அப்படிச் செய்தால் உங்களுடைய வரி அப்பீல் கவனிக்கப்படும்.

ஜி. நாராயணஸாமி செட்டி,
பிரசிடெண்டு, இராயப்பேட்டை,
வரிசெலுத்வோர் சங்கம்.

## மதுரை இராமநாதபுரம் ஜில்லா மகாநாடு

மதுரை இராமநாதபுரம் ஜில்லா மகாநாடு இம்மாதம் 23, 24-ந் தேதிகளில் மதுரையில் ஸ்ரீமான் எஸ். ஸ்ரீநிவாசய்யங்கார் தலைமையில் நடைபெற்றது. அதுகாலை நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள் வருமாறு:—

தேசத்தின் முன்னேற்றத்திற்கு எத்தகைய சுயராஜ்யம் வேண்டுமென்று காங்கிரஸ் குறிப்பிட்டிருக்கிறதோ அதையே இம்மகாநாட்டார் ஏற்றுக் கொள்வதல்லாமல் தங்களுக்குப் பலாத்காரமற்ற ஒத்துழையா இயக்கத்தில் முழு நம்பிக்கை இருக்கிறதென்றும் தெரிவித்துக் கொள்கின்றனர்.

தேசத்தின் நன்மையைக்கோரி சிறைக்குச் சென்றிருக்கும் மகாத்மா காந்தியிடம் இம்மகாநாட்டாருக்கு முழு நம்பிக்கை இருக்கின்றது. அலி சகோதரர்களுக்கு வந்தன மளிப்பதல்லாமல் மதுரை இராமநாதபுரம் இந்தியாவின் மற்ற பாகங்கள் ஆகிய இவ்விடங்களினின்று தேசத்தின் நன்மையை உத்தேசித்துச் சிறைக்குச் சென்றிருக்கும் எல்லாத் தேசபக்தர்களுக்கும் இம்மகாநாட்டார் தங்கள் நன்றியறிதலைச் செலுத்துகின்றனர்.

சமீபத்தில் துருக்கியர்கள் அடைந்த வெற்றிக்காகத் தங்கள் சந்தோஷத்தைத் தெரிவிப்பதல்லாமல், கிலாபத் இதுவரை பெற்றிராத பெருமையைப் பெற வேண்டுமென்றும் இம்மகாநாட்டார் கடவுளைப் பிரார்த்திக்கின்றனர்.

காங்கிரஸ் குறிப்பிட்டிருக்கும் நிர்மாண வேலைத் திட்டத்தை நிறைவேற்றுவதற்காக எல்லாரும் உழைக்கவேண்டுமென்று இம்மகாநாட்டார் தீர்மானிக்கின்றனர்.

இந்தியாவின் நன்மையை முன்னிட்டும் தொழிலாளர்களின் நன்மையை முன்னிட்டும் கதரை எங்கும் பரப்ப வேண்டுமென்றும், மாகாண அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிகள் கதரின் விலையைக் குறைப்பதற்கு முயற்சிகள் செய்ய வேண்டுமென்றும், மதுவிலக்குக்காக ஒவ்வொருவரும் பாடுபட வேண்டுமென்றும் சட்டசபைகளுக்குச் செல்லக் கூடாதென்றும், சட்டசபைகளுக்கு அங்கத்தினர்களாய் நிற்போர்களுக்கு ஓட்டர்கள் ஓட்கொடுக்கக் கூடாதென்றும் எல்லா ஹிந்து வகுப்பார்களும் கோயில்களுக்குள் செல்ல வேலை செய்ய வேண்டுமென்றும் தொழிலாளர்களின் நன்மைக்காகத் தொழிற் சங்கங்களும் சபைகளும் ஏற்பட வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

வருகிற மகாநாடு திண்டுக்கல்லில் நடைபெறும்.





# ஆயுளை விருத்தியாக்குவதெப்படி?

லண்டன் 'டைம்ஸ்' பத்திரிகையின் நியுயார்க் நிருபர் அப்பத்திரிகைக்குப் பின் வருமாறு எழுதுகிறார்:—

நூறு வயதுக்குமேல் ஜீவித்திருக்கும் மூன்று முதியோர்கள், தேகநிலை கெட்டுப்போவதற்கும் அற்ப வயதாய் இருக்கும்போதே மரணமடைவதற்கும் முக்கியமான காரணம், அளவுக்கு மீறி சாப்பாடு உட்கொள்ளுதலே யாகுமென்று குறிப்பிட்டிருக்கிறார்கள்.

அமெரிக்காவின் பிரபலவாசிகளான ஸ்ரீமான்கள் ஜான். ஏ. ஸ்டுவேர்ட், பார்ஸ்பேங்கலர் ஆகிய இவர்கள் சென்ற ஆகஸ்ட் 26-ந் தேதியில் தங்கள் நூறுவது வயதடைந்ததினத்தைக் கொண்டாடினார்கள். டாக்டர் ஸ்டிபன்ஸ்மித் என்ற அறிஞர் சென்ற ஆகஸ்ட் 26-ந் தேதியில் தான் இவ்வுலகவாழ்க்கையை நீத்து இறைவனடி சேர்ந்தார். அவர் இறக்கும்போது நூறு வருஷங்கள் பூர்த்தியடைய இரண்டு மூன்று வாரங்களே பாக்கியாயிருந்தன. அன்னார் தம் தேசமக்கள் திடகாத்திரர்களாகவும் நீண்ட ஆயுளுடனும் வாழ்வதற்காகப் பத்து போதனைகளைச் சொல்லியிருக்கிறார். அவர் நூறு வயதாவதற்கு முன் இறந்துபோகும் மனிதர்கள் தங்களுடைய செயல்களாலே இறந்துபோக வேண்டியவர்களா யிருக்கிறார்களென்று அடிக்கடி குறிப்பிடுவது வழக்கம்.

நீண்டநாள் ஜீவித்திருப்பதற்கு அவர் குறிப்பிட்டிருக்கும் போதனைகள் வருமாறு:—

எத்தகைய மாமிசத்தையும் புசியாமல் இருப்பது நலம்.

மிகுதியாய்ப் பாலைச் சாப்பிடவேண்டும்; முதலில் உடம்புக்கு ஒத்துக்கொள்ளாதிருக்கலாம். ஆயினும் அதை விடாமற் சாப்பிடவும்.

பகற் போஜனத்திற்குப் பின்னரும் இராப் போஜனத்திற்குப் பின்னரும் குறைந்தது பதினைந்து நிமிட நேரமாவது சிறுதயில் கொள்ள வேண்டும்.

தினமொன்றுக்குப் பத்து மணி நேரம் தூங்க வேண்டும்.

காலநிலை ஏற்றுக்கொள்வதாய் இருந்தால் வெளியில் தூங்கலாம்.

சுருட்டு முதலானவைகளைப் பிடிக்கக் கூடாது.

மிட்டாய்த் தினுசுகளைச்சாப்பிடக் கூடாது.

போதை தரக்கூடிய வஸ்துக்களையும் இதர லாகிரி வஸ்துக்களையும் உட்கொள்ளக் கூடாது.

சாய்வு நாற்காலியில் படுத்துக் கொள்வதையும் உறங்குவதையும் விட்டு விட வேண்டும்.

வேலை செய்யாமல் சோம்பலாய்க் காலங் கழிப்பது சீக்கிரத்தில் மரணத்தைத் தேவேதரும்.

இயற்கைக்கு மாறுக நடந்துகொள்ளுதல் கூடாது.

பைத்தியக்கார சேஷ்டைகளை யெல்லாம் விட்டுவிட வேண்டும்.

அமெரிக்காவில் நடைபெற்ற உள்நாட்டுக் குழப்பத்தின்போது அமெரிக்க ஜனாதிபதியான லின்கனுக்குப் பண விஷயம் சம்பந்தமாக ஆலோசனை கூறுபவராயிருந்த ஸ்ரீமான் ஜான். ஏ. ஸ்டுவேர்ட் என்பார் எல்லா விதத்திலும் மிதமாயிருப்பதே நலம் என்று கூறுகிறார். அதிகமாகக்குடிப்பது எவ்வளவு கேடுதலானதோ அவ்வளவு கேடுதலானது அதிகமாய்ச் சாப்பிடுவதும் என்கிறார். நான் எண்பது வருடகாலமாய்ச் சுருட்டு முதலானவைகளை உபயோகித்ததே கிடையாது என்கிறார்.

ஸ்ரீமான் பார்ஸ்பேங்கலர் என்பார் தாம் நூறு வயதுக்குமேலும்ஜீவித்திருப்பதற்குக் காரணம் மிதமாய்ச் சாப்பிடுவதும் தினமொன்றுக்கு இரண்டு வேளைசாப்பிடுவதும் அதிகமாக வேலைசெய்வதும்மிகுதியாக மருந்து சாப்பிடாமல்இருப்பதும் சுருட்டு முதலானவை பிடியாமல் இருப்பதுமென்று குறிப்பிடுகிறார்.

## ஸ்ரீ அம்பாய்தாஸ் தேசாய்

### தியாகம் புகழ்ந்துரைக்கப்படுகிறது

ஒத்துழையா இயக்கத்தில் சம்பந்தப்பட்டதற்காக ஸ்ரீமான் கோபால்தாஸ் அம்பாய்தாஸ் என்பாரின் கிராமங்கள் பம்பாய் அரசாங்கத்தினரால் பறிமுதல்செய்யப்பட்டன என்பதை நேயர்கள் அறிவார்கள். அவருக்குப் பம்பாயைச் சேர்ந்த பாடிதார்கள் இம்மாதம் 21-ந் தேதியில் ஸ்ரீமான் வல்லபாய் பேட்டலின் தலைமையில் ஒரு உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுத்து, அன்னார் தற்காலத்திய ஹரிச்சந்திரர் என்றும் புகழ்ந்துரைத்தார்கள். அக்கிராசனம் வகித்த ஸ்ரீமான் வல்லபாய் பேட்டல் ஸ்ரீமான் தேசாய் என்பாரின் கிராமங்கள் மிகக் கொஞ்சமாயிருந்தபோதிலும் அவர் தாம் தேசத்திற்காக உழைத்ததன் பயனாய் மற்ற சுதேச மன்னர்களுக்கு வழி காட்டியாயிருக்கிறார் என்றும் ஒத்துழையாமை இறக்கவில்லையென்பதற்கு நேரான சான்று ஸ்ரீமான் தேசாயின் தன்னலமற்றத் தியாகமேயாகுமென்றும் ஒத்துழையா இயக்கம் எல்லா இயக்கங்களுக்கும் தலை சிறந்து விளங்குகிறதென்றும் மகாத்மாகாந்தி ஒவ்வோர் உள்ளத்திலும் குடிகொண்டிருக்கிறார் என்றும் அவருடைய கொள்கைகள் அவரைப் பின்பற்றுவோர்களால் ஆளப்பட்டு வருகின்றனவென்றும் கூறினார்.

தமக்கு வாசித்துக் கொடுத்த உபசாரப் பத்திரத்திற்குப் பதிலளிக்கு முகத்தான் ஸ்ரீமான் தேசாய் தாம் தம் கடமையையே செய்திருப்பதாகவும் நம்முடைய சொந்த நன்மைகளை உத்தேசித்து தேச நன்மைகளைப் பாழ்படுத்திவிடக் கூடாதென்றும் மகாத்மா காந்தியைக் கூடிய விரைவில் விடுவிக்க ஒவ்வொருவரும் பாடுபட வேண்டுமென்றும் கூறினார்.

# இந்தியாவுக்குக் கல்வி

### அரசாங்க அங்கத்தினர் கூறும் முறை

ஐக்கியமாகாண அரசாங்க வரவுசெலவு அங்கத்தினரான ஸ்ரீமான் பிரிமாண்டல் நைனிடாலிலுள்ள அரசாங்கப் பள்ளிக்கூடத்தின் வருஷோற்சவத்தின் போது இந்தியக் கல்வியின் லட்சியங்கள் என்பதைப் பற்றி உபந்யாசஞ் செய்கையில் பின் வருமாறு கூறினார்:—

படிக்கும் பையன்கள் பலவீனர்களாய் இருப்பதற்காக நான் வருந்துகிறேன். பள்ளிக்கூட ஜன்னல்களுக்குப் போடப்பட்டிருக்கும் கண்ணாடிகளை உடைக்கும் சக்தியைக்கூட அவர்கள் பெற்றிருக்கிறார்களா என்பதை நான் பார்க்க விரும்புகிறேன். ஆங்கில பள்ளிக்கூட முறைகளை அப்படியே இந்தியப் பள்ளிக் கூடங்களுக்கும் அநுஷ்டிப்பது கூடாதகாரியமாகும். தேசத்தின் வளர்ச்சிக்குத் தக்கபடி இந்தியப் பாடசாலைகள் அமைக்கப்பட வேண்டும். இந்தியாவில் தேசியகலைஞானம் உண்டாகாதவாறு கல்வி கற்பிக்கப்பட்டு வருவதைக் கண்டித்து கல்கத்தா ஒத்துழையா பத்திரிகையான சர்வெண்ட் கூறியிருப்பதில் சில உண்மையாகவே இருக்கின்றன.

ஹரித்வாரத்தில் ஏற்பட்டிருக்கும் குருகுல வாசத்தின் அரசியல் முதலானவைகளை நான் ஏற்றுக்கொள்ளா விட்டாலும், தேசத்தின் தேவைகளுக்குத் தக்கபடி அஃது அமைக்கப் பட்டிருக்கிறது என்று நான் அபிப்ராயப் படுகிறேன். ஹைதராபாத் உஸ்மானியாசர்வ கலாசாலையில்தாய் மொழி மூலமாகக் கல்வி கற்பிக்கப்பட்டு வந்ததைப் போல் அவ்விடத்திலும் தாய்மொழியிலேயே படிப்பு சொல்லிக்கொடுக்கப்பட்டு வருகிறது. சமஸ்கிருதம் படிக்கும் மாணவர்களில் நூற்றுக்கு இருபது பேர் வீதம் குறைந்து விட்டதற்காக வருந்துகிறேன். இப்படியிருந்தால் ஹிந்து கலைஞானங்களைப் படிப்பதற்கு மதிப்பு எப்படிக் கொடுக்கமுடியும்?

பள்ளிக் கூடங்களில் பையன்களுக்குத் தேசபக்தி உண்டாக்க வேண்டுவது இன்றியமையாததாகும். பையன்களுக்குப் பூனாவின் சரித்திர விசேஷத்தைப் பற்றியாவது அங்குவசித்த ஸ்ரீமான் கோகேல் முதலானவர்களைப் பற்றியாவது சொல்லப்பட்டுவருவதில்லை. இது ஒரு குறையாகும். ஆகவே அவைகளை யெல்லாம் எடுத்துரைக்க வேண்டும். தேசியவாதிகள் ஆங்கிலக் கல்வி முறையில் இருக்கும் குறைகளை நீக்குவதற்காகத் தேசியக் கல்வி ஸ்தாபனங்களை ஏற்படுத்துகிறார்கள். இவைகள் விருத்தி யடையாமல் நாளா வட்டத்தில் அழிந்து கொண்டே போகின்றன. தற்போதைய கல்வி முறையில் சீர்திருத்தம் ஏற்படவேண்டிய அவசியத்தைப்பற்றி ஜனங்களுக்குத் தேசியவாதிகள் எடுத்துரைத்துக் கொண்டு போதல் நலம்.

# சர் பெர்ஸிகாக்ஸ்

## அவமானப்படுத்தப்பட்டார்

லண்டன் டைம்ஸ் பத்திரிகையின் பஸ்ரா நிருபர் அப்பத்திரிகைக்கு ஆகஸ்ட் 26-ந் தேதியில் பின்வருமாறு தந்தி கொடுத்திருக்கின்றனர்:—

இராக்கில் பிரிட்டிஷ் ஹை கமிஷனரான சர் பெர்ஸிகாக்ஸ் என்பாரின் காரியதரிசியார், பெய்சல் அரசரின் காரியதரிசிக்கு எழுதியது வருமாறு:—

பெய்சல் அரசர் இராக்கின் இராஜ்ஜியாதிகாரத்தை ஏற்றுக்கொண்ட வருஷோற்சவ தினமாகிய ஆகஸ்ட் 23-ந்தேதியில் ஹை கமிஷனரும் அவருடைய கூட்டத்தாரும் தம் சந்தோஷத்தை அரசருக்குத் தெரிவிப்பதற்காக அரண்மனைக்குச் சென்றார்கள். ஆனால் அங்கிருந்த கூட்டத்தார் அரசரின் வரவேற்புமண்டபத்திற்குச் செல்லும் வழியை அடைத்துவிட்டார்கள். ஹைகமிஷனர் அரண்மனைக்குள் நுழைந்தபோது அவருடைய வண்டிகள் கூட்டத்தினிடையில் செட்டிச் செல்லவேண்டியதாயிற்று.

பார்ப்பதற்குக் கூட்டத்தின் நோக்கம் சாந்தமாகவே இருந்தது. அரசரின் அறைகளின் தாழ்வாரங்களிலிருந்து சிலர் பேசிக்கொண்டிருந்ததை அக்கூட்டத்தார் கேட்டுக்கொண்டிருந்தனர். இதை ஹைகமிஷனர் பார்த்தார். ஹைகமிஷனர் படிகளைக் கடந்தவுடன் யாரோ ஒருவர் எதையோ சொல்ல (ஹைகமிஷனர் அது என்னவென்று தெரிந்துகொள்ளக் கூடவில்லை) ஜனங்கள் கை தட்டினார்கள்.

ஹைகமிஷனர் போய்விட்டவுடன் கூட்டமும் கலைந்துவிட்டது. விசாரணையின் பயனாய் அக்கூட்டத்தார் அரசரின் அந்தரங்கக் காரியதரிசியின் உத்தரவுபெற்றே அவ்விடத்தில் இருந்தார்களென்றும் பேர் பெற்ற அமிதவாதிகள் ஜனங்களின் உணர்ச்சியைக் கெடுக்கக் கூடியதான உபந்யாசங்களைச் செய்ததல்லாமல் இராக்கிலிருக்கும் பிரிட்டிஷாரையும் தூஷித்தார்களென்றும் மந்திரிசபை கலைந்துவிடவேண்டுமென்றும் நிர்வாகத்தில் பிரிட்டிஷ் பொறுப்பு எடுபட்டு விடவேண்டுமென்றும் பேசினார்களென்றும் தெரிய வந்தது. படிகளை ஹைகமிஷனர் தாண்டியவுடன் அக்கூட்டத்தார் கை தட்டியதற்குக் காரணம் 'பிரிட்டிஷ் ஆதிக்கம் ஒழியவேண்டு' மென்று அங்கு பிரசங்கம் செய்துகொண்டிருந்த ஒருவர் கூறியதேயாகும்.

மாட்சிமை தங்கிய பிரிட்டிஷ் சக்கரவர்த்தியின் பிரதிநிதியாய்த் தாம் பெய்சல் அரசருக்குத் தம் சந்தோஷத்தை வெளிப்படுத்தச் சென்றகாலையில் இம்மாதிரியான சம்பவம் நடைபெற்றதை ஹைகமிஷனர் பெரிதும் கண்டனஞ் செய்கிறார், இன்னும் இதைப்பற்றி ஹைகமிஷனர் லண்டனுக்குத் தெரிவிக்கப் போகிறார். தாம் அகௌரவிக்கப் பட்டதற்காக மன்னிப்பு கேட்டுக் கொள்ளப் படவேண்டுமென்றும் அரசரின் அந்தரங்கக் காரியதரிசி வேலையினின்று நீக்கிவிடப்பட வேண்டுமென்றும் கூறுகிறார்.

ஜனங்களின் உணர்ச்சியைக் கெடுப்பதும் பிரிட்டிஷாருக்குவிரோதமாக இருப்பதுமான உபந்யாசங்களைச் செய்து அரசரின் வாசஸ்தானத்தின் கௌரவத்தைப் போக்கடித்தவர்கள் மீது அரசர் எம்மாதிரியான நடவடிக்கை எடுத்துக் கொள்ளப் போகிறார் என்பதைப் பற்றியும் தெரிவிக்கும்படியாய்க் கேட்கிறார்.

பெய்சல் அரசரின் காரியதரிசி பின்வரும் பதிலை அனுப்பினார்:—

அரசர் உடம்பு அசௌகரியமாய் இருந்தும் தாங்கள் எழுதிய கடிதம் அவர் முன்னிலையில் வைக்கப்பட்டது. அதில் குறிக்கப் பட்டிருக்கும் சம்பவத்தைக் கண்டு அரசர் அதிக ஆயாசமடைந்த தல்லாமல் தம் வருத்தத்தையும் தெரிவிக்கும்படியாய்க் கூறியுள்ளார். வேண்டுவ செய்து ஹைகமிஷனர் குறிப்பிட்டிருக்கும் படியும் செய்வர். ஹைகமிஷனர் இம்மாதிரி நடைபெற்றதை மறந்து விடுவார் என்று அரசர் நம்புகிறார். மேலும் ஹை கமிஷனரை அகௌரவிக்க வேண்டுமென்று அம்மாதிரி செய்யப்படவில்லை. அம்மாதிரி நினைக்கவும் இடமிருக்கிறதென்று ஒருவரும் கருதவில்லை.

## வாலாஜாபாத்

### (ஒரு நிருபரிடமிருந்து)

24-9-22-ல் இந்து முஸ்லீம் இளஞ்சகோதரர்களால் தேசிய பஜனையுடன் மஹாத்மா திருவுருவப்படத்தைப் புஷ்ப மாலைகளால் அலங்கரித்து கைராட்டினத்தில் எழுந்தருளுவித்து ஊர்வலம் செய்யப்பட்டது. காங்கரஸில் சேரும்படியும் கதர் உடுத்தும்படியும் நூல் நூற்கும்படியும் பலத்த பிரசாரம் செய்யப்பெற்றது. மஜீத் வாயிற்படியின் வழியாக தேசிய பஜனையுடன் செல்லும்பொழுது, கிலாபத்துக்காகப் பாடுபடும் காஜி முஸ்தபா கமால் பாஷாவுக்கு வெற்றிகிடைக்குமாறு, அல்லாஹு அக்பர்! இஸ்லாத்துக்கு ஜே! கிலாபத்துக்கு ஜே என்ற கோஷ்டம் செய்தது குறிப்பிடத்தக்கது.

சிறந்த விஷயம்! குறைந்த சந்தா!!

# "குமரன்"

ஒரு இனிய
செந்தமிழ்ப் பத்திரிகை
அழகான கிளேஸ் காகிதத்தில்
**32** பக்கங்கள்

ஆசிரியர்:
சோ. முருகப்ப செட்டியார்

| | |
|---|---|
| உள் நாட்டுக்கு சந்தா | ரூ. **1—8** |
| வெளி நாட்டுக்கு | „ **2—0** |

மானேஜர்,
"குமரன்,"
காரைக்குடி.

---

# அற்புதமான நாவல்கள்

| | ரூ. | அ. | | ரூ. | அ. |
|---|---|---|---|---|---|
| மாண்டிகிருஸ் | 3 | 0 | ரங்கநாயகி | 1 | 4 |
| மேனகா | 3 | 0 | அர்தப்புரக் காதல் | 1 | 4 |
| லண்டன் திருடர்கள் | 2 | 12 | சொக்கப்பர் | 1 | 0 |
| உமார் பாஷா | 2 | 8 | வானநிதி | 0 | 12 |
| முக்தமாலா | 2 | 0 | கோகர்ஜான் | 0 | 10 |
| சித்ரரேகை | 1 | 8 | குணமணி | 0 | 8 |
| தர்மாம்பாள் | 1 | 12 | ரமணி | 0 | 8 |
| ஆதிலக்ஷ்மி | 1 | 12 | சினிவாசன் | 0 | 6 |
| அயாஷா | 1 | 12 | மோஹனா | 0 | 5 |
| இந்திராணி | 1 | 4 | | | |

கேட்லாக் இனாம்!

எம். ஆதி அண்டு கம்பெனி.
புஸ்தக வியாபாரிகள்,
60/5, பத்திரையன் வீதி, மதராஸ்.

---

GOLD MEDAL TRADE MARK REGD SILVER MEDAL

ரிஜிஸ்டர் செய்தது
பொன் வெள்ளி மெடல்கள் பெற்ற
நெ. **1** மெடிகேடட்
ஏ. ஜெ.

## பரிமள மூக்குத்தூள்

சென்ற 20 வருஷ காலமாக என்னுடைய தமயனாராகிய A. S முகம்மது ஷம்சுத்தீன் சாயபும், யானாகிய A. ஜெயினுலாப்தீன் சாயபுவும், நாங்களிருவரும் A. S. சுகந்த மூக்குத்தூளென்றும் நெ. 1. A. J. பரிமள மூக்குத்தூளென்றும் இரண்டு விதமான தூள்களைச்செய்து ஒன்றாக வியாபாரம் செய்து வந்தோமாகையால் என்னுடைய தமயனார் A. S. முகம்மது ஷம்சுதீன்சாயபு காலஞ்சென்று விட்டபடியால் தற்போது நான் என்பேரால் உள்ள நெ. 1. A. J. பரிமள மூக்குத்தூளை நல்ல மணமாயும் திடமானதாயும் முதல் தரமான சரக்காயும் செய்து விற்பனை செய்து கொண்டு வருகிறபடியால் மேல் கண்ட தூளும் 1. நெ. சென்னை சாதாரண மூக்குத் தூளும் இன்னும் மற்ற யூனானி மருந்துகள் முதலானவைகளும் வேண்டுவோர் கீழ்க் கண்ட என் விலாசத்திற்கு எழுதித் தருவித்துக் கொள்வீர்களென்று அன்புடன் எதிர் பார்க்கின்றேன்.

| | | | |
|---|---|---|---|
| புட்டி 1-க்கு ... ... | 0 | 4 | 0 |
| 1-டஜன் புட்டிக்கு ... | 2 | 4 | 0 |
| ஒருசேர் அல்லது 24-தலாம் | 1 | 9 | 0 |
| 1-நெ. சாம்பில் டஜன் 1-க்கு | 0 | 12 | 0 |

A. ஜெயினுலாப்தீன் சாயபு,
நெ. 106. யூனானி மெடிகல் ஹால்,
தங்கசாலை வீதி,
சௌகார்பேட்டை போஸ்டு, மதராஸ்.

---

# ஸ்வாமி விவேகானந்தர்

இயற்றிய நூல்களின் தமிழ் மொழி பெயர்ப்பு

| | | |
|---|---|---|
| வேதாந்ததத்துவம் | 0 | 8 |
| தற்கால இந்தியா | 0 | 8 |
| எதிரொலிகள் | 0 | 8 |
| எனது குருநாதர் | 0 | 8 |
| கிழக்கும் மேற்கும் | 0 | 8 |

நவசக்தி புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.

---

# ஆரியமத - - உபாக்கியானம்

20-பதிப்புகளுக்குமேல் வெளிவந்துள்ளன. 100,000-காப்பிகள்வரை செலவாயிருக்கின்றன. இதன் சிறப்புக்கு வேறு அத்தாக்ஷியும் வேண்டுமோ?

முதற்பாகம் விலை அணா **8**.
இரண்டாம் பாகம் அணா **10**.

மானேஜர்:—விவேக போதினி,
மயிலாப்பூர், சென்னை.

---

தீபாவளி ஸ்பெஷல் விற்பனை
திருப்பூர் சுத்த சுதேசி

## கதர் ஆடைகள்

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியாரால் அங்கீகரிக்கப்பட்டதும் திருப்பூர் கைத்தொழில் காட்சியில் தங்கமெடல் பரிசு பெற்றதுமான கைராட்டின நூலினால் கைத்தறிகளில் நெசவு செய்யப்பட்ட கதர் ஆடைகள்.

| | |
|---|---|
| வேஷ்டிகள் | சுந்தடி சேலைகள் |
| திரியல் துண்டுகள் | சீட்டிப்புடவைகள் |
| துவால்கள் | ரவிக்கை சீட்டிகள் |
| ஷர்ட்டிங்கோட்டிங் | தாவணிகள் |
| செக்துணிகள் | சலர் சால்வைகள் |
| பெட்ஷீட்டுகள் | லுங்கிகள் |

இன்னும் பல தினுசுகளும் எங்களிடம் நயமாகவும் விலை சரசமாகவும் கிடைக்கும். வேண்டியவர்கள் நேரிலாவது ஆர்டர் மூலமாவது பெற்றுக்கொள்ளலாம்.

மாதிரி துண்டுகளும் கிரயஜாபிதாவும் இனாமாய் அனுப்பப்படும்.

மா. வே. கருப்பண்ண செட்டி,
சுதேசி கதர் வியாபாரம், திருப்பூர்.

---

# திருக்குறள் மூலமும் உரையும் 4-0-0

| | | | |
|---|---|---|---|
| கந்தப்புராணம் மூலமும் உரையும் | 6 | 0 | 0 |
| தாயுமானவர் பாடல் „ | 4 | 0 | 0 |
| நைடதம் மூலமும் உரையும் | 4 | 0 | 0 |
| தனிப்பாடற்றிரட்டு „ | 5 | 0 | 0 |
| சிறப்புப்பெய ரகராதி | 3 | 8 | 0 |
| விஷ்ணுபுராணம் | 3 | 0 | 0 |
| மாம்பழக்கவி பிரபந்தத்திரட் | 2 | 8 | 0 |
| 61-வருஷப் பஞ்சாங்கம் | 8 | 0 | 0 |
| கம்பராமாயணம் வசனம் | 12 | 0 | 0 |

கேட்லாக் இனாம்.

வி. நாராயணன் அண்டு கோ.
4 (ஈ) கொண்டிசெட்டி தெரு, சென்னை.

---

ரப்பர் ஸ்டாம்பு செட்டு ரூ. 2.

பித்தளை அரக்கு சீல் ரூ. 1.

கேட்லாக்குக்கு
எழுதிக் கேட்கவும்.

டி. ஜீ. சுந்தரம் அண்டு கோ.,
கோவிந்தப்ப நாயக்கன் வீதி,
மதராஸ்.

---

# நித்தியகரும விளக்கம்

"இது ஓர் அருமையான நூல். ஆஸ்திகங் குன்றி நாஸ்திகம் பரவி நிற்கு மிக்நாளில் வெளிவந்திருக்கும் இந்நூல் தற்கால உண்மை மக்களுக்கு தினந்தோறுஞ் செய்ய வேண்டிய கருமங்களை யுக்தி அனுபவங்களின் மூலமாக இனிது விளக்குகின்றது. காலமறிந்து எழுதப் பெற்றிருக்கும் இந்நூலை யாவரும் படித்து இன்புற வேணுமாய் விரும்புகின்றோம்" என "நவசக்தி" ஆசிரியர் அவர்களால் மதிப்புரை எழுதப்பெற்றுள்ளது. இதன் விலை அணா 6. வி. பி. யில் அணா 11.

காரியதரிசி,
சமரச சன்மார்க்க சங்கம்,
ஆரணி. N. A.

---

# புதிய புஸ்தகங்கள்

ஓடாவல்லவர் ரூ. 2-8

| | | | |
|---|---|---|---|
| ஞானம்பிகை | ... | 1 | 8 |
| ஞானசம்பந்தம் | ... | 1 | 4 |
| ஔவை அருந்தமிழ் | ... | 0 | 12 |
| பாண்டவர்களின் பாலலீலை | ... | 0 | 10 |
| புத்திமானேபலவான் | ... | 0 | 12 |
| கர்நாடக யோகினிக் கதைகள் | ... | 0 | 12 |

கே. பழநியாண்டி பிள்ளை கம்பெனி,
திருவல்லிக்கேணி, சென்னை.

---

ஜெர்மன் பான்ஸி
ஜலதரங்கமென வழங்கும்

## சங்கீதப் பெட்டி.

பிரபஞ்சத்திலுள்ள யாவருக்கும் சங்கீதத்தின் அருமை நன்கு தெரிந்ததேயன்றோ. இந்த ஜலதரங்கமென்னும் வாத்தியத்தை இரண்டு சின்ன குச்சியினுதவியால் வாசிக்கும்போது கேழ்ப்பதற்கு செவிக்கு மட்டற்ற ஆனந்தத்தைக் கொடுக்கும். தவிரவும் பன்னிரண்டு வித சப்தத்துடன் கலந்த சங்கீதத்தை புண்டுபண்ணும். ஸ்திரீ, புருஷாள், பால்யர் முதலிய சகலரும் சுலபமாய் வாசிக்கக்கூடியது.

விலை ரூபா 1-தான்.

V. ரத்தினம் & பிரதர்ஸ்,
நெ. 3, இருளப்பன் தெரு, மதராஸ்.

---

மதுரை அழகிய புட்டாச்சேலை
ரூபா 5

முழம் 16. விலை மிகவும் சரசமாயும், பார்வைக்கு அழகாயும் நேர்த்தியாயும், நீடித்து உழைக்கக்கூடியதாயுமிருக்கும்.

விற்கும் விலை

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| பார்வதி சரிகை சேலை | 1-க்கு | 7 | 8 |
| | | 7 | 4 |
| சாவித்திரி | „ | 5 | 8 |
| வெள்ளை மாங்காய் | „ | 4 | 8 |
| பந்தர் தவளக்கொடி | „ | 6 | 4 |
| நடுத்தரமான வெங்காய பொறை | „ | 7 | 4 |
| ராசபுரம் சாதா | „ | 6 | 0 |
| புதுச்சேரி | „ | 8 | 0 |
| சகுந்தலா | „ | 8 | 0 |
| ரோஜா கலர் சரிகை | „ | 8 | 0 |

விலாசம்:—
என். ஸி. அண்டு கம்பெனி,
320, தம்புசெட்டி தெரு, மதராஸ்.

---

## நவசக்தியின் சந்தா விவரம்.

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| வருட சந்தா | ... | 5 | 0 |
| ஆறுமாத சந்தா | ... | 3 | 0 |
| வெளி நாடு-வருட சந்தா | ... | 6 | 0 |

### விளம்பர விகிதம்.

| | | | |
|---|---|---|---|
| கலம் 1-க்கு வாரம் 1-க்கு | ... | 7 | 0 |
| சில்லரை விளம்பரம் 1-அங். | ... | 0 | 8 |

நீண்டகாலம் விளம்பரஞ் செய்வோர் நேரே எங்கட்கு எழுதவும்.

மானேஜர்
"நவசக்தி"
இராயப்பேட்டை, சென்னை.

---

## 8-ம் வருட ஆரம்பம்.

"ஆனந்தபோதினி" என்னும் மாதச் சஞ்சிகைக்குஎட்டாவது வருஷம் (அடுத்த ஆடிமீ) பிறக்கப்போகிறது. தமிழ்நாட்டில் தலைமைப் பெற்று விளங்குவதும் அதிக சந்தாதாரரை யுடையதும் இது தான். வருஷசந்தா ரூ. 1.

வெளிநாடுகளுக்கு ரூபா 1—4—0.
மாதிரி சஞ்சிகை இனாம்.

'ஆனந்தபோதினி' ஆபீஸ், மதராஸ்.

---

பலஹீனர்களுக்கு
ஒரு வரப்பிரசாதம்!

வால்பர்களுக்குத் தேவாமிர்தம்!

காலத்தின் கோலத்தை என்னென்பது!

தற்போது வாலிபர்களும் வயதானவர்களைப் போல் காணப்படுகிறார்கள், வாலிபர்களே!

இழந்து போன வீரியத்தைத் திரும்பவும் அடையவேண்டுமானால் - அந்தத் தெய்வ சக்தியை அடைந்து ஆனந்தத்தை அநுபவிக்கவேண்டுமானால் - கீழ்க் குறிப்பிட்டிருக்கும் விலாசத்திற்கெழுதி 'செக்டார்' என்னும் அமிர்தமான மருந்தை வரவழைத்து அதன் ஆச்சரிய குணத்தைக் காணுங்கள். இவ்வுயரிய மருந்தில் மூன்று புட்டிகள் உபயோகித்தால் உங்கள் தோற்றம் மாறபடும்; சந்தோஷம் உண்டாகும். புதிய ஒரு சக்தியைப்பெறுவீர்கள். உடனே எழுதுங்கள்.

ரவீனு அண்டு கோ,
90, ஆச்சாரப்பன் தெரு, சென்னை.

---

சுதேசியமானது! உபயோகமானது!!

# அமிர்தாஞ்சனம்

## எல்லா நோய்களுக்கும் சித்தௌஷதம்

தலைநோய், முதுகுநோய், இடுப்புவலி, மார்ச்சளி, சைத்தியம், கீல்பிடிப்பு, இருமல், ஒற்றைத் தலைநோய், வீக்கம், சுளுக்கு முதலான நோய்களுக்கு திவ்யாமிருதம்.

டப்பி 1-க்கு 0—10—0.
டஜன் 1-க்கு 6— 0—0.

| படை மருந்து | பற்பொடி | மோஹினி தைலம் |
|---|---|---|
| டப்பி 1-க்கு | டப்பி 1-க்கு | டப்பி 1-க்கு |
| 0—6—0 | 0—2—0 | 0—12—0 |

அமிர்தாஞ்சனம் டிபோ, மதராஸ், போம்பாய்.

---

## இனாம் — வைத்தியவித்தியா — இனாம்

100-பக்கங்களடங்கிய வைத்திய நூல்

வாலிபம் முதல் முதுமை வரை ஸ்திரீ புருஷர்கள் வியாதியற்றவர்களாயும் பலசாலிகளாயுமிருந்து ஆரோக்கியமான சந்ததியைப்பெற்று சுகமே வாழ்க இன்றியமையாத விதிகள் இப்புத்தகத்திலுள. இப்புத்தகம் வியாதியஸ்தர்களுக்கு வைத்தியன், ஸ்திரீகளுக்கு மருத்துவச்சி, வாலிபர்களுக்கு உயிர்த்தோழன்.

ராஜ வைத்திய நாராயணஜீ கேசவஜீ, 27, சினு பஜார், மதராஸ்.

Printed and Published by T. V. Kalyanasundara Mudaliar, at the Sadhu Press, 44-Bazaar Road, Royapettah, Madras.

